


# பி. எம். ஸ்ரீகண்டய்யா

ஏ. என். மூர்த்தி ராவ்



இந்திய இலக்கியச் சிற்பிகள்

இந்த நூற்றுண்டின் முதலிருபதாண்டளவில் கன்னட இலக்கிய உலகில் 'ஒரு புதிய படைப்பிலக்கிய இயக்கம்' என்று கூறத்தக்க இலக்கியப் புரட்சி வெடித்தது. இதன் விளைவாகப் புதிய கவிதை உலகம் மலர்ந்தது. பழமையின் சின்னங்களாக விளங்கிய காப்பியங்களின் இடத்தைத் தனிப்பாடல்கள் கைப்பற்றின. இந்த மறுமலர்ச்சியைக் கன்னட உலகில் தோற்றுவித்தவர் ஆங்கிலப் பேராசிரியரான பி. எம். ஸ்ரீகண்டய்யா ஆவார். அவர் ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்த்த அறுபது தனிப்பாடல்கள் கன்னட இலக்கியப் போக்கில் பெரிய திருப்பத்தை உண்டாக்கின.

ஸ்ரீகண்டய்யா பெரும் புலவராகவும் பேச்சாளராகவும் விளங்கியவர். அவர் எதிர்காலத்தைப் பற்றிய கனவு காண்பதிலும் வல்லவர். கன்னடத்தில் புதுவகை இலக்கியப் படைப்புகளை உண்டாக்க வேண்டும் என்றும், கன்னடம் பேசும் மக்களடங்கிய கன்னட மாநிலத்தை உருவாக்க வேண்டும் என்றும், அவர் கனவு கண்டார்.

கருநாடகத்தின் மீதும் மக்கள் மீதும் கன்னட மொழியின் மீதும் அவர் கொண்டிருந்த கங்கு கரையற்ற காதல் கன்னடியரை அவர் பால் ஈர்த்தது. கன்னடியரை நீண்ட துயிலிலிருந்து விழித்தெழச் செய்தார். தன் கனவுகள் நினைவானதைக் கண்டு மகிழ்ந்தார்.

பழமையை எதிர்த்து அவர் மூட்டிய புரட்சிக் கனல் கொழுந்து விட்டு எரிந்து, மேலும் பல இலக்கியப் புரட்சிகளுக்குக் கலங்கரை விளக்கமாக ஒளி வீசிக் கொண்டிருக்கிறது.

அட்டை அமைப்பு : **சத்தியஜித்ரே**

உருவப் படம் : **C. V. தர்மரத்தினம்.**

**விலை ரூ. 2.50.**

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# பி. எம். ஸ்ரீகண்டய்யா

ஆசிரியர் :

ஏ. என். மூர்த்தி ராவ்

தமிழாக்கம் :

பொன்னகர் மதிவாணன்



சாகித்திய அக்காதெமி

புது தில்லி

# முன்னுரை

நான் பி. ஏ., எம். ஏ., வகுப்புகளில் படித்துக் கொண்டிருந்த போது, காலஞ் சென்ற பேராசிரியர் பி. எம். ஸ்ரீகண்டய்யா எனக்கு ஆசிரியராக இருந்தார். அவர் கூறியனவும் நிகழ்த்திக் காட்டியன வும் என் வாழ்வில் ஒரு நிலையான பிடிப்பை ஏற்படுத்தியிருப்பதால், ஒரு வகையில், அவருக்கு நான் இன்னும் தொடர்ந்து மாணவ ஞக இருப்பதாகவே நினைக்கிறேன். அவர் ஆற்றிய பணிகளையும் அவருடைய ஆளுமைத்திறனையும் புலப்படுத்தும் முயற்சியாகவே இந்நூலை எழுதினேன். வாழ்நாளில் அவர் எவ்வெவற்றை உயர் வாக மதித்தாரோ அவற்றின் நோக்கங்களை நன்கு வலியுறுத்தி யிருப்பதாக நம்புகிறேன்.

இந்நூலில் இடம் பெற்றுள்ள ஸ்ரீகண்டய்யாவின் வாழ்க்கை விவரங்கள், மைசூர் பல்கலைக்கழகக் கன்னடக் கல்வி நிறுவனத்தின் வெளியீடான "பி. எம். ஸ்ரீகண்டய்யா" என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டவை யாகும். அந் நூலாசிரியரான பேராசிரியர் எஸ். பி. ரங்கண்ணு அவர்களுக்கு நான் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன்.

ஸ்ரீகண்டய்யா தன் பெயரை 'Sri Kantia' என்றே உச்சரித்து வந்தார். கன்னடியர் அல்லாதவரும் அப் பெயரின் சரியான உச்சரிப்பை எளிதில் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக இந் நூலில் அவர் பெயரை ஸ்ரீகண்டய்யா என்றே குறித்துள்ளேன்.

இந்நூலில் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டுள்ள பகுதிகள் செய்யுள் மொழிபெயர்ப்பல்ல.

கன்னட இலக்கிய வுலகில் புதுயுகம் தோற்றுவிக்கும் இயக்கம் கண்ட சான்ருேரின் வாழ்வும் பணியும் குறித்து மீண்டும் நினைவு கூர்வதற்கு ஒரு நல் வாய்ப்பை எனக்கு நல்கிய சாகித்திய அக்காதெமியினருக்கு நான் பெரிதும் நன்றியுடையவனுவேன்.

**ஏ. என். மூர்த்தி ராவ்**

புது தில்லி
23 அக்டோபர் 1974

# பொருளடக்கம்

பகுதி ஒன்று

# 1. வாழ்க்கை வரலாறு

கன்னட மொழியின் புதுமை இலக்கிய வரலாற்றில், இந் நூற்ருண்டின் தொடக்க காலத்தில் ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டது. குறிப்பாக, 1910-1920 கால எல்லையில் தோன்றிய இம்மறு மலர்ச்சியை ஒரு மாபெரும் புரட்சி என்றும் ஒரு பெரிய படைப் பிலக்கிய இயக்கம் என்றும் சொல்லலாம். 'கன்னட மொழியில் இதுவரை தோன்றியிராத திடீர் மறுமலர்ச்சி இது' என்று கன்னட மக்கள் இதனைக் குறிப்பிடுகின்றனர்.

இதன் விளைவாக இதற்கடிப்படையான முயற்சிகளில் சிலர் இறங்கினர். இவர்கள் வெறும் மனஉறுத்தலாலும் ஒழுங்குபடாத ஊக்கத்தாலும் தம் குறிக்கோளை அடைவோமா என்பதைத் தெளிவு படுத்திக் கொள்ளாமலே இலக்கியத் துறையில் ஈடுபட்டனர். இத் தகையவர்களால் நிலைத்த படைப்பிலக்கியங்களை உருவாக்க முடியவில்லை. இவர்களையடுத்துத் தோன்றிய இலக்கிய மேதை பி. எம். ஸ்ரீகண்டய்யா தான் மேற்கொண்ட முயற்சியில் பெருவெற்றி கண்டு கன்னட இலக்கிய வானில் சுடர் வீசித் திகழ்கிருர். இவருடைய படைப்பிலக்கியங்களில் காணப்படும் கவின்மிகு கற்பனைத் திறனும், எத்தகைய சூழலையும் ஒரே பார்வை யில் நுணித்தறியும் தொலைநோக்கும், எதையும் நுட்பமாக உணர்ந்து தெளிவாக உணர்த்தும் ஆற்றலும் ஒன்ருக இணைந்து இவருக்குக் கன்னட இலக்கியவுலகில் பெருவெற்றியைத் தேடித் தந்துள்ளன. இப்படிப்பட்ட திறமைகளைப் பெற்றிருந்ததால், கன்னடத்தில் சாகாவரம் பெற்ற இலக்கியங்களைப் படைக்கும் பணி இவருக்கு கிடைத்தது.

கருநாடக மாநிலத்திலுள்ள சம்பிகெ என்னும் சிற்றூரில் 1884 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் மூன்ரும் நாள் பி. எம். ஸ்ரீகண்டய்யா பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் பெல்லூர் மயிலாரய்யா; தாயாரின் பெயர் பகீரதம்மா. ஸ்ரீகண்டய்யாவின் பெற்ருேர் நடுத்தரக் குடும்பத்தைச் சார்ந்த வைதீகர்கள். மைசூரிலிருந்து 9 கல் தொலை விலுள்ள சீரங்கப் பட்டணத்தில் இவருடைய தந்தையார் புகழ்பெற்ற வழக்கறிஞராக இருந்தார். மயிலாரய்யாவின் ஐந்து குழந்தைகளில்

ஸ்ரீகண்டய்யா மூத்தவராவார். இவரது துடிப்புள்ள இளமைப் பருவம் இயற்கையெழில் மிக்க தோட்டங்களில் ஆடிக்களிப்பதில் பொலிவுற்றது.

ஸ்ரீரங்கப்பட்டணத்தில் தொடக்கக்கல்வி கற்ருர்.– அதன்பின் உயர்நிலைப்பள்ளி மற்றும் புகுமுக கல்லூரிக்கல்வி பயில மைசூருக்கு அனுப்பப்பட்டார். மைசூரில் புகுமுக கல்லூரிக் கல்வி (F. A.) முடிந்ததும், பெங்களூர் சென்ட்ரல் கல்லூரியில் சேர்ந்து பயின்று 1903 ஆம் ஆண்டு பி. ஏ. பட்டம் பெற்ருர். சென்ட்ரல் கல்லூரியில் மேற்படிப்பு பயில வாய்ப்பில்லாததால் மேற்கொண்டு படிப்பைத் தொடர்வதற்காகச் சென்னைக்குச் சென்ருர். சென்னையில் படித்து 1906-ஆம் ஆண்டு வழக்கறிஞர் பட்டமும் 1907 ஆம் ஆண்டு எம். ஏ. பட்டமும் பெற்ருர். இவருக்கு வழக்கறிஞர் தொழிலில் ஈடுபட விருப்பமிருந்ததாகத் தெரியவில்லை. பிறகு, மைசூர் அரசுப் பணியாளர் தேர்வு (Civil Service Commission) எழுதினுர். கன்னட இலக்கியம் செய்த நற்பேற்றின் காரணமாக அத்தேர்வில் இவரால் முதல்தரமாகத் தேர்ச்சிபெற முடியவில்லை. கன்னட இலக்கியத்தின் பக்கம் இவருடைய கவனம் திரும்புவதற்கு இந் நிகழ்ச்சி ஒரு திருப்புமையமானது என்று சொல்லலாம்.

சென்னையில் படித்துக் கொண்டிருந்த காலத்திலும் தான் அரசாங்க வேலை பெற்றுப் பதவியில் அமர வேண்டும் என்று ஸ்ரீகண்டய்யா எண்ணியதில்லை. மாலை நேரங்களில் தம் கல்லூரி நண்பர்களுடன் சென்னைக் கடற்கரையில் அமர்ந்து கன்னட இலக்கியம் தொடர்பாக உரையாடுவதை வழக்கமாகக் கொண் டிருந்தார். அந்த உரையாடல்களின்போது, கன்னட இலக்கியம் ஆங்கில இலக்கியத்தை விட எவ்வளவு தாழ்ந்த நிலையில் உள்ளது என்று உருக்கமாக எடுத்துரைத்து வருந்துவார். கிரேக்கத் துன் பியல் நாடகங்கள், பிளாட்டோ ஷேக்ஸ்பியர் ஆகியோரின் இலக்கியப் படைப்புகள் போன்றவை கன்னட மக்களுக்குக் கன்னட மொழியில் கிடைக்கும் நாள் எந்த நாள் என்று கனுக் காண்பார். தன் கனவு நனவாக வேண்டும் என்று தனக்குள் உறுதியெடுத்துக் கொள்வார்.

இவர் உள்ளத்தில் இழையோடிக் கொண்டிருந்த எண்ணங்கள் செயல் வடிவம் பெறத்துடித்துக் கொண்டிருந்தன. இவர் எம். ஏ. பட்டம் பெற்று நான்கு ஆண்டுகள் முடிந்த பின் 1911-ஆம் ஆண்டு தார்வார் நகரில் ஆற்றிய சொற்பொழிவின்[1] போது, இவருடைய

1. 'கன்னடமொழி தலையெடுக்கும் வகை' என்னுந் தலைப்பில் அவர் ஆற்றிய சொற்பொழிவு 'கன்னடத்தார்க்கு நல்ல இலக்கியம்' என்னும் அவர் நூலின் முதற்கட்டுரையாக உள்ளது.

கன்னடிகரிகெ ஒள்ளெய சாஹித்ய- வெளியீடு-காவ்யாலயா, மைசூர்.)

எண்ணங்கள் கன்னடியரின் நெஞ்சங்களில் எதிரொலித்தன. அச் சொற்பொழிவில், கன்னட இலக்கிய வளர்ச்சி குறித்துப் பல்வேறு சிக்கல்களை வகைப்படுத்தி அவை தொடர்பான ஆழ்ந்த கருத்து களைத் தெளிவுபட விரித்துரைத்தார். கன்னடத்தில் புதுவகைப் படைப்பிலக்கியங்களை உருவாக்குவதற்கான வழிமுறைகளுக்கு வடிவமைத்துக் கொடுத்தார்.

1909-ஆம் ஆண்டு மைசூர் அரசர் கல்லூரில் ஆங்கிலம் மற்றும் கன்னட விரிவுரையாளராக அமர்த்தப்பட்டார். 1914-ஆம் ஆண்டு துணைப் பேராசிரியராகப் பதவியுயர்வு பெற்ருர். அதே ஆண்டில் A Handbook of Rhetoric என்னும் ஆங்கிலத் தொகுப்பு நூலை வெளியிட்டார். இச்சமயத்தில் தான் ஆங்கிலத்தில் வரலாற்றுப் பெருமை வாய்ந்ததும் போற்றத்தக்கதுமான லிரிக் (Lyric) என்னும் பாடல் வகைகளைக் கன்னடத்தில் இவர் மொழி யாக்கம் செய்திருக்க வேண்டும். இத்தகைய முயற்சியை அக் காலத்தில் எவரும் அறிந்திருக்கவில்லை. 1919-ஆம் ஆண்டு முதன் முதலாக இவற்றில் மூன்று பாடல்கள் வெளியிடப்பட்டன. இவர் ஏற்கெனவே புகழேணியை எட்டிப்பிடித்த ஆங்கிலப் பேராசிரியராக இருந்ததால் இவருடைய கன்னடப் படைப்புகள் விரும்பிப் படிக்கப் படலாயின. இவருடைய இல்லறவாழ்வும் இனிதாக அமைந் திருந்தது. இவருக்கு இரு மகளிரும் ஒரு மகனும் ஆக மூன்று குழந்தைச் செல்வங்கள் இருந்தனர்.

இச்சமயத்தில் இவரை மீளாத்துயரத்தில் மூழ்கடித்த இருபெருந் துன்ப நிகழ்ச்சிகள் அடுத்தடுத்து ஏற்பட்டன. இவருடைய மகன் தம்மையா என்பவன் கண் நோயால் தாக்கப்பட்டு, மருத்துவரின் மருந்துக் கோளாருல் கண்களை இழந்து குருடாளுன். அடுத்துச் சில நாட்களில் அவருடைய அருமை மனைவியாரும் மகப்பேற்றுக்குப் பின் வரும் நச்சுக் காய்ச்சலால் இறந்துவிட்டார். துயரங்களையெல்லாம் தன் மனவுறுதியால் தாங்கிக் கொண்டார். இந்த மனவுறுதி, தன் உள்ளத்தோடு தானே போராடி இவர் பெற்றுக்கொண்ட வலிமை யாகும். மீண்டும் ஒருமுறை விதி இவரோடு விளையாடியது. அடுத்த இரண்டு வாரத்திற்குள் இவருடைய தாயாரும் இளைய மருமகனும் இறந்து போயினர். இக்குடும்ப நிகழ்ச்சிகள் இவருடைய நெஞ்சை மேன்மேலும் நெக்குடையச் செய்தன. விதியின் விளையாட்டிலிருந்து யாரால் தப்ப முடியும்?

ஸ்ரீகண்டய்யா அவர்கள் அணிநயம்படத் தன் தங்கையிடம் கூறிய ஒரு செய்தியைப் பேராசிரியர் எஸ். எ. ரங்கண்ணு என்பவர் ஒரு முறை கீழ்க் கண்டவாறு குறிப்பிட்டார்.

"எல்லாம் வல்ல இறைவன் மக்களுக்கு நல்லது செய்ய நினைத்தாலும் கெட்டது செய்ய நினைத்தாலும் முதலில் என்னையே சோதனைக் கேற்ற முதற்கருவியாக எடுத்துக் கொள்கிருன். இறைவனின் பார்வை எவர் மீதும் படாமல் என்மீதே முதன்முதல் படுவதால், இந்த உலகத்தில் நான் ஒருவன் தான் கடவுளுக்கு மிகவும் பிடித்தமானவன் என்று தெரிகிறது" என்ருராம்.

இவருடைய மனைவியார் இறந்த போது இவருக்கு முப்பது அல்லது முப்பத்தொன்றுக்கு மேலில்லை. இருப்பினும் மறுமணம் செய்துகொள்ள மறுத்துவிட்டார். தன் வாழ்நாள் பணியாகக் கருதிய இலக்கியப் பணியில் ஈடுபடுவதிலேயே உள்ளமும் உயிரும் ஒன்றியவராய் — கடமையுணர்ச்சியின் முழுவடிவமாய் — காட்சியளித்தார். ஆங்கிலத்தின் பிடியிலிருந்து மீட்டுக் கன்னடத் தாய்க்கு இலக்கிய அரியணையில் முடிசூட்டுவதும், கன்னட இலக்கியத்தைக் கண்மூடித்தனமான பழமைச் சேற்றிலிருந்து விடுவித்து மறுமலர்ச்சி என்னும் இலக்கியச் சோலையில் செழித்து வளரச் செய்வதும், கன்னட மக்கள் வாழும் அனைத்துப் பகுதிகளையும் உள்ளடக்கிய கன்னட மாநிலத்தை உருவாக்குவதும் இவருக்குக் குறிக்கோள்கள் ஆயின.

ஆங்கில ஆசிரியராக இவரேற்றுக் கொண்ட தொழில், இவரைப் பொதுவாக ஐரோப்பிய இலக்கியங்களிலும் சிறப்பாகக் கிரேக்க இலக்கியங்களிலும் மிகுந்த நாட்டங்கொள்ளச் செய்தது. கிரேக்க அறிஞர்களான எஸ்கிலஸ் (Aeschylus) சோபாக்லிஸ் (Sophocles) ஆகியோரின் நூல்களைக் கிரேக்க மொழி மூலத்திலேயே படித்துச் சுவைக்கும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது. மேனுட்டு இலக்கியங்களை இலக்கிய நயத்துக்காகவே படித்து மகிழ்ந்தார். தம் மனமகிழ்ச்சிக்காக அவற்றைக் கருத்தூன்றிப் படித்தார் என்று சொன்னுலும் அந்த முயற்சி கன்னடத்தில் பல புதுப் படைப்பிலக்கியங்களை உருவாக்குவதற்கு முன்கூட்டிச் செய்யப்பட்ட தெளிவான தயாரிப்பாக விளங்கியது என்பதே முற்றிலும் உண்மையாகும். தமிழையும் வடமொழியையும் அவர் படித்ததும் இதற்காகவே என்று சொல்லலாம்.

1920-ஆம் ஆண்டளவில் இவர் மேலும் ஆழ்ந்து படிக்கத் தொடங்கிவிட்டார். இவரது குடும்பத்தில் நேர்ந்த கொடுந்துயர நிகழ்ச்சிகளால் நெக்குருகிய இவர்மனம் இலக்கியப் பணியில் ஒருமுகமாகத் திரும்பி இருமடங்கு மும்மடங்கு வேகத்தில் செயல்படத் தொடங்கியது. இவருடைய அஃகியகன்ற கல்வி, குறிக்கோளை அடையவேண்டும் என்னும் உறுதி, கன்னட நாட்டின் மீதும் மொழியின் மீதும் கொண்ட ஆராக்காதல் ஆகியவை இவருடைய துயரத்தின் சுமையைக் குறைத்தன. ஒருமுறை, திரு. மூர்த்திராவ் என்பவர் அவருடைய நண்பரிடம், "ஸ்ரீகண்டய்யா அவர்கள் கால

வெள்ளத்தில் கரைந்து போகாமல் கன்னடத்தைக் காப்பாற்றியிருக்கிறுர்'' என்று கூறினர். அதைக் கேட்ட அந்த நண்பர், ''கன்னடமும் ஸ்ரீகண்டய்யாவைக் காப்பாற்றியிருக்கிறது'' என்றுராம். இவர் குடும்பத்தில் அடுத்தடுத்து நேர்ந்த துயர வெள்ளத்தில் மூழ்கி விடாமல் இவரைக் கன்னடம் காப்பாற்றிய நிகழ்ச்சி இந்த உண்மையை உறுதிப்படுத்துகிறது என்று அந்த நண்பர் சுவைபட எடுத்துக் காட்டியிருப்பது வரவேற்கத்தக்க உண்மையாகும்.

ஸ்ரீகண்டய்யா அவர்கள் 1909-ஆம் ஆண்டு ஆங்கிலம் கன்னடம் ஆகிய இருமொழிகளுக்கும் விரிவுரையாளராக அமர்த்தப் பட்டார். இதிலிருந்து கன்னடம் மட்டும் கற்ற ஆசிரியர்களுக்குக் கல்லூரி அளவில், மாணவர்களிடை வரவேற்பும் மதிப்பும் அந்நாளில் இருக்கவில்லை என்று தெரிகிறது. இரு மொழிகளுக்கும் ஒருவரே விரிவுரையாளராக இருப்பதைத் தவிர்ப்பதற்காகப் பத்து ஆண்டு களுக்குப்பின், 'நீர், இனிமேல், ஆங்கிலத் துணைப்பேராசியராகப் பணியாற்ற விரும்புகிறீரா அல்லது கன்னடப் பேராசிரியராகப் பணியாற்ற விரும்புகிறீரா' எனப் பல்கலைக்கழகம் கேட்டது. இந்த விஞ புதுமையாக இருந்தாலும்கன்னட மொழியின் வளர்ச்சிக்காகத் தன்னைக் காணிக்கையிட்டுக் கொண்ட ஸ்ரீகண்டய்யா கன்னடப் பேராசிரியர் பதவியையே விரும்பி ஏற்றுக்கொண்டார். இவர் இவ்வாறு ஆங்கிலத் துணைப் பேராசிரியர் பதவியை விரும்பியேற்றுக் கொண்டதற்கான அடிப்படை நிகழ்ச்சியொன்று உண்டு.

ஸ்ரீகண்டய்யாவின் இளமைக் கால நண்பரும், கேம்பிரிட்ஜில் படித்துப் பட்டம் பெற்றவருமான பேராசிரியர் என். எஸ். சுப்பராவ் என்பவர், ஒரு முறை, பின்வருமாறு கூறினர். ''ஸ்ரீகண்டய்யா, நீர் மேனுட்டுப் பல்கலைக் கழகங்களில் ஒரு பட்டம் பெற்றுலொழிய ஆங்கிலத்துறையில் நீடித்துப் பணியாற்ற எதிர்காலத்தில் வாய்ப் பிருக்காது.''

இவ்வாறு அவர் கூறியது, அன்றைய நிலையில், ஒருபொதுவான உண்மையேயாகும். இந்தியப் பல்கலைக்கழகங்களில் அத்தகைய தொரு மரபான ஏற்றத்தாழ்வு இருந்து வந்தது. ஆங்கிலேயரே பேராசிரியர் போன்ற பெரும்பதவிகளில் இருப்பர். அப்பதவிகள் இந்தியருக்குத் தரப் படுவதில்லை. இவர்களுக்கு அடுத்த நிலையில் மேனுட்டில் படித்துப் பட்டம் பெற்ற இந்தியர் மதிக்கப்பட்டனர். இந்தியப் பல்கலைக் கழகங்களில் படித்துப் பட்டம் பெற்றவர்கள் கடைசிநிலையில் வைத்து மதிக்கப்பட்டனர். தன் ஆங்கிலப் புலமை யைப்பற்றிய மதிப்பீட்டைத் தானே நன்கறிந்திருந்ததால் ஸ்ரீகண்டய்யா அந்த நண்பரின் பேச்சை ஒரு அறைகூவலாக ஏற்று, 'நான் ஆங்கிலேயரான ஆங்கிலப் பேராசிரியர்களை விடச் சிறந்த

ஆங்கிலப் பேராசிரியராக விளங்குவேன்' என்று உறுதி பூண்டு அதனை மெய்ப்பித்தும் காட்டி விட்டார். இவர் கன்னடப் பேராசிரியர் பதவியை ஏற்காமல் ஆங்கிலத் துணைப் பேராசிரியர் பதவியை ஏற்றதன் காரணம் இதுவே.

மேனாட்டில் படித்துப் பட்டம் பெற்றவர்களோடு மட்டுமல்லாமல் ஆங்கில நாட்டுப் பேராசிரியர்களோடும் போட்டியிடத்தக்க இவருடைய ஆங்கிலப் புலமையை அனைவரும் வியந்தனர். கன்னடப் பேராசிரியர் என்பதால் இவருக்கு ஏற்பட்ட புகழை விட இணையில்லாத ஆங்கிலப் பேராசிரியர் என்பதால் உண்டான புகழே மிகுதி. சில ஆண்டுகள் எல்லா இடங்களிலும் ஆங்கிலத்திலேயே பேசிவந்தார். கன்னடக் கூட்டங்களில் கூட ஆங்கிலத்தில் உரையாற்றினார்.

முதல் நிலை ஆங்கிலப் பேராசிரியராக இவர் பதவியுயர்வு பெற்றபோது ஆங்கிலப் பேராசிரியர்கள் அனைவரையும் விட இவரையே வெளியுலகம் அதிகமாக அறிந்திருந்தது. ஆங்கிலத் துறையில் தலைமைப் பேராசிரியராக இருந்தவரும் ஆக்சுபோர்டு பல்கலைக்கழகத்தில் படித்தவருமாகிய ஆங்கிலேயர் ஸ்ரீகண்டய்யாவைப் பற்றிப் பேசும்போது, "பேராசிரியர் ஸ்ரீகண்டய்யா இங்கிலாந்துக்குச் சென்றால் திருப்பி அனுப்பமாட்டார்கள். அங்கேயே ஆக்சுபோர்டு பல்கலைக்கழகத்தில் ஆங்கிலப் பேராசிரியராக இருக்குமாறு வற்புறுத்தி அமர்த்திக் கொள்வார்கள்" என்று உளமாரப் புகழ்ந்துரைத்தார்.

ஆங்கிலத்துறையில் இவர் விடாப்பிடியாக நிலைத்துநின்று புகழ் பெற்ற பேராசிரியராக விளங்கிய நிகழ்ச்சி, என். எஸ். சுப்பராவின் பேச்சைக் கேட்டதால் பீறிட்டெழுந்த தன்மேம்பாட்டுணர்வின் பரிசு என்றும், தன் தகுதி காக்கும் பொருட்டு ஏற்றுக் கொண்ட அறைகூவலின் வெற்றி என்றும் கூறுவதைவிட, அவருடைய இயல்பான பரந்த அறிவுக்குத் தரப்பட்ட மதிப்பாகக் கொள்வதே பொருந்தும். ஆங்கிலத்துறையில் பேராசிரியராக இருந்ததால் இவருடைய சொல்லுக்குச் செல்வாக்குமிகுந்தது. தனக்கு நாளுக்கு நாள் பெருகி வரும் செல்வாக்காலும் மதிப்பாலும் கன்னட மொழிக்குத் தான் எண்ணியபடி அதிக சேவை செய்ய முடிந்ததை இவர் உணர்ந்தார்.

கன்னட மொழி வளர்ச்சிக்கு உதவுவதற்காகக் கிடைத்த வாய்ப்பாகக் கருதி 1926-ஆம் ஆண்டு பல்கலைக்கழகப் பதிவாளர் பதவியை ஏற்றுக் கொண்டார். பதவியேற்றபின் பல்கலைக் கழகத்தில் கன்னடத்திற் கெனத் தனித்துறையைத் தோற்றுவித்தார். கன்னடத்தில் பட்டமேற்படிப்பு (M. A.) வகுப்பைத் தொடங்கச் செய்தார். பல்கலைக்கழகப் பதிவாளராக இருந்து கொண்டே

பல்கலைக்கழகக் கன்னடத் துறையின் கௌரவக் கன்னடப் பேராசிரியராகவும் பணியாற்றினார். பல்கலைக்கழகத்தில் கன்னட வெளியீட்டுத் தொடர்நூல்களைத் தடையின்றி வெளியிடுவதற்காகப் போதிய நிதி ஒதுக்கீட்டுக்கு வழிவகை செய்தார். இவரே அவ்வெளியீட்டு நூல்களின் பதிப்பாளராகவும் இருந்தார். இம்முயற்சியின் விளைவாக, அதுவரை அச்சிடப்படாத பழங்கன்னடநூல்கள், புதுவகை இலக்கியத் திறனாய்வுகள், மேனாட்டு இலக்கிய மொழி பெயர்ப்புகள், கருவி நூல்கள் முதலிய பயன் மிகுந்த நூல்கள் எண்ணிறந்தனவாய் வெளியிடப்பட்டன. இலக்கியம் மட்டுமல்லாமல், தத்துவம், மன்பதை அறிவியல் (Social Science) தொடர்பான நூல்களும் வெளிவந்தன.

கன்னடத்தில் புதிய எழுத்தாளர்களை ஊக்குவிப்பதற்காக, ஆண்டுதோறும் மாணாக்கரால் கன்னடத்தில் இயற்றப்படும் சிறந்த கவிதைக்குத் தங்கப் பதக்கம் அளிக்கும் திட்டத்தை உருவாக்கினார். தத்துவத் துறையைச் சாந்தவரும் இவருடைய மாணாக்கருமான ஜி. அனுமந்த ராவ் என்பவர், பல்கலைக்கழக ஆசிரியர் மன்றத்தைத் தொடங்கச் செய்தார். அம்மன்றத்தின் உறுப்பினர்கள் ஆண்டு தோறும் இருமுறை அல்லது மும்முறை நாட்டுப் புறங்களுக்குச் சென்று, ஒருவாரம் அங்கேயே தங்கியிருந்து, பொது மக்களுக்குப் பயன்படும் வகையில், வரிவிதிப்பு, குடும்ப வாழ்க்கை, கண்களின் பாதுகாப்பு, சத்துணவு ஆகிய தலைப்புகளில் சொற்பொழிவாற்றினர். பல்கலைக்கழகத்திலிருந்து நாட்டுப்புற மக்களின் செவிகளுக்குக் கன்னடமொழி எட்டியது இதுவே முதல் தடவையாகும். அச்சொற்பொழிவுகள் சிறு சிறு புத்தகங்களாக அச்சிடப்பட்டு, ஒரு ரூபாய்க்கு எட்டு புத்தகங்கள் வீதம் மலிவு விலைக்கு விற்கப்பட்டன. புத்தகம் விற்கும் பணியையும் அனுமந்தராவே தொடங்கி வைத்தார். ஸ்ரீகண்டய்யா அவர்களால் உருவாக்கப்பட்டு புத்துணர்ச்சியும் மறுமலர்ச்சி வேகமும் ஊட்டப்பட்ட இளைஞராக அனுமந்தராவ் விளங்கினார்.

ஸ்ரீகண்டய்யா 1930-ஆம் ஆண்டு பெங்களூர் சென்ட்ரல் கல்லூரியில் முதுநிலை ஆங்கிலப் பேராசிரியராக அமர்த்தப்பட்டார். 1942-ல் ஓய்வு பெறும்வரை அங்கேயே பணியாற்றினார். பெங்களூர் சென்றதும் அங்கு ஒரு ஆங்கிலக் கருத்தரங்கைத் தொடங்கினார். அது ஆங்கிலக் கருத்தரங்கு (Seminar) என்று பெயர் தாங்கியிருந்தாலும், ஆங்கிலத்தோடு நிற்காமல், பண்பாடு தழுவிய அனைத்துத் துறைகளிலும் அறிவியல் துறைகளிலும் ஆர்வம் கொண்ட ஆசிரியர் மாணவர் எல்லோரையும் ஈர்த்தது. பெங்களூரின் சூழ்நிலையை இவர் பெரிதும் விரும்பியதாகத் தெரியவில்லை.

இவரால் எழுதப்பட்ட நூல்களுள் பெரும்பாலானவை 1926—1935 கால எல்லைக்குள் வெளிவந்தன. இவருடைய ‘ இங்கிலிஷ்

கீதெகளு' (ஆங்கிலப் பாடல்கள்) என்னும் நூல் 1926-ல் வெளிவந்தது. இங்கிலாந்து நாட்டில் Lyrical Ballads என்னும் நூல் பெற்றிருந்த வரவேற்புக்குச் சமமாக இந்நூல் கன்னட மக்களின் கருத்தைக் கவர்ந்தது. இவருடைய 'கதாயுத்த நாடகம்' என்னும் கவிதை நாடகமும் இதே ஆண்டில் வெளிவந்தது. இவருடைய 'அசுவத்தாமன்' என்னும் நூல் இவருக்கு மிகுந்த பேரும் புகழும் பெற்றுத் தந்தது. இது மகாபாரதத்தையும் கிரேக்கப் புலவர் சோபாக்கிலிசின் Aias என்னும் நூலையும் தழுவி எழுதப்பட்ட துன்பியல் நூல். அசிக்கிலிசின் Persae என்னும் நூலை 'பாரசிகரு' என்னுந் தலைப்பில் கன்னடத்தில் மொழி பெயர்த்து 1935 ல் வெளியிட்டார். 1936-ஆம் ஆண்டு மைசூர் பல்கலைக்கழகம் வெளியிட்ட கையேடு ஒன்றில் கன்னட யாப்பிலக்கணம் பற்றிய கட்டுரை எழுதினர். கன்னட இலக்கிய வரலாறு எழுதத் திட்டமிட்டு அதன் முதற்பகுதியை எழுதினர். அதுவும் பல்கலைக்கழகக் கையேட்டில் சேர்க்கப்பட்டுள்ளது. இவர் பல்வேறு சமயங்களில் எழுதிய கவிதைகளின் தொகுப்பு 'ஹொன்கனசுகளு' (பொன் கனவுகள்) என்னுந் தலைப்பில் 1943-ஆம் ஆண்டு வெளிவந்தது. ஐந்து ஆண்டுகளுக்குப்பின், இவருடைய சொற்பொழிவுகள், மதிப்புரை, அணிந்துரை ஆகியவற்றின் தொகுப்பான 'கன்னடிகரிகெ ஒள்ளெய சாஹித்ய' (கன்னடியர்க்கு நல்ல இலக்கியம்) என்னும் நூல் 1948-இல் வெளிவந்தது. 1935-ல் வெளியிட்ட 'பாரசிகரு' என்னும் பெரிய இலக்கியத்துடன் இவருடைய இலக்கியப் பணி நின்று விட்டது. அதன் பிறகு இவர் ஒன்றும் எழுதவில்லை.

இவரால் மட்டும் செய்யக்கூடிய பணியை இவரே செய்து முடித்தார் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். சேக்ஸ்பியரின் துன்பியல் நாடகங்களையும் கிரேக்க இலக்கியங்களையும் இவரைப் போல் நயம்பட மொழி பெயர்க்கும் திறனுளர்கள் வேறு எவரேனும் கருநாடக மாநிலத்தில் இருக்கிருர்களா என்று கண்டறிய முடியாது. ஸ்ரீகண்டய்யா அவர்கள் சேக்ஸ்பியரைத் தன் வழிபடு தெய்வமாகவே கருதியவர். இவர் ஒருமுறை, "பொதுமையை வலியுறுத்துவதிலும் வாழ்க்கையைப் பல்வேறு கோணங்களில் கண்டு அரிய கருத்துகளை வெளியிடுவதிலும் சேக்ஸ்பியருக்கு நிகரானவராக வேறு எவரையும் கூறமுடியாது. ஆனல் இந்தியராகிய நமக்குக் கிரேக்கர் இலக்கியப் படைப்பில் நெருங்கியவராய் உள்ளனர்" என்று குறிப்பிட்டார்.

எஸ்கிலஸின் Prometheus Bound என்னும் நூலையும் ஷெல்லியின் Prometheus unbound என்னும் நூலையும் அடிப்படையாகக் கொண்டு ஒரு நாடகம் எழுதத் திட்டமிட்டிருந்தார். 'கிழவனின் தாடியை இளைஞனின் மீசையோடு கட்டி அதில் ஊஞ்சலாடு' (Tie the old man's beard to the young man's

moustaches and then swing on it) என்னும் பழமொழியை ஒரு முறை வேடிக்கையாகக் குறிப்பிட்டார். இவர் நினைத்த அந்நாடகம் Matarisvan என்னும் பெயரிலமைந்த தனிப் படைப்பாகும். வேத காலத் தொல்கதையைத் தழுவியும் இரட்டுறுதலாக அமைந்த ஒரு நாடகம் எழுத நினைத்தார் என்றும், ஓரிரு காட்சிகளை எழுதி முடித்திருந்தார் என்றும், கூறுகின்றனர். ஆயினும் அதை இவர் எழுதி முடிக்கவில்லை. கிரேக்கத் துன்பியல் நாடகங்களையும் சேஃசுபியரின் நாடகங்களையும் கன்னடத்தில் வெளிக் கொணர வேண்டும் என்னும் இவருடைய இளமைக் கனவு ஓரளவுக்குத்தான் நனவாகியது.

1935-க்கு பிறகு எழுதுவதை நிறுத்திக் கொண்டாரேயொழிய இலக்கியப்பணியை புறக்கணித்து விடவில்லை. இக்காலத்தில் இலக்கியச் சொற்பொழிவாற்றுவதில் பெரிதும் ஈடுபட்டார். இவருடைய பேச்சுகளே இலக்கியங்களாயின. இவருடைய தனிச் சிறப்பு வாய்ந்த பேருரைகள் தேனினும் இனிய தனிக் கன்னடத்தில் அமைந்தவை; எளிய நடையில் தெளிவான கருத்தோட்டம் பொருந்தியவை; செவிக்கினிய குரலினிமையும் எடுப்பான உச்சரிப்பும் இவருடைய பேச்சுக்கு மேலும் மெருகூட்டின. பொதுச் சொற்பொழிவுகளுக்கான வாய்ப்புகள் ஏராளமாகப் பெருகின. இவருடைய பேச்சை அடிக்கடிக் கேட்டு மகிழ கன்னட மக்கள் பெரிதும் விரும்பினர். பேரும் புகழும் இவரைத் தாளுகத் தேடி வந்தன. புகழும் ஒருவகையில் தொல்லை தருவதாகும் என்பதையும் உணர்ந்தார். இவருக்கு இணையானவர் எவரும் இல்லை என்னும் நிலையில், இருபது ஆண்டுகாலமாகக் கன்னட இலக்கிய உலகின் முடி சூடாத மன்னளுகத் திகழ்ந்தார். புகழ் அவரைப் பின் தொடர்ந்து வந்தது. பெருமைகளும் பாராட்டுகளும் மலையெனக் குவிந்தன. கன்னட சாகித்திய பரிசத்தினரால் 1928-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் நடத்தப்பட்ட கன்னட இலக்கிய மாநாட்டுக்குத் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்டார். மைசூர் அரசர் இவருக்கு 'ராஜ சேவா சக்த' (அரச சேவைக்காகத் தன்னைக் காணிக்கையாக அளித்தவர்) என்னும் விருதளித்துச் சிறப்பித்தார். இதே ஆண்டின் கன்னட சாகித்திய பரிசத்தின் துணைத் தலைவராகவும் தெரிந்தெடுக்கப்பட்டார். பரிசத்தின் தலைவராக அரசமரபினரே தொடர்ந்து இருந்துவரும் வழக்கத்திளுல் முறையான தலைமை நிருவாகியைத் துணைத்தலைவர் என்று அழைப்பர்.

இவருடைய பதவி மற்றும் புலமையை அறிந்து இவர் பேச்சைக் கேட்க மக்கள் கூட்டங்கூட்டமாகத் திரண்டார்கள் என்பது முதன்மையான காரணம் அன்று. கேட்பாரைத் தன்பால் ஈர்க்கும் இவருடைய குரலினிமையில் மெய்ம்மறந்து மகிழவே மக்கள் பெருமளவில் திரண்டனர். இவர் பெயரில் அமைந்துள்ள இரு

சொற்களை விளையாட்டாக, முன்பின் மாற்றியமைத்தால், கண்ட்ட—ஸ்ரீ என்பது குரல் இனியர், குரலினிமை என்னும் செல்வ முடையவர் என்று பொருள்படுதலைக் காணலாம். இவருடைய மூத்த நண்பரொருவர் இவருடைய குரலினிமையை கண்ட்டஸ்ரீ என்று குறிப்பிட்டார். ஸ்ரீ என்னுஞ்சொல், செல்வச்செழிப்பு, மேம்பட்ட பெருமை என்று பொருள் தரும். இது ஒரு தேவதைக்கும் பெயர். இம்மூன்று பொருள்களும் இவருக்குப் பொருந்தி வருதலைக் காணலாம்.

இவர் மேடையில் ஏறிநின்ருல் தங்குதடையில்லாமல் சரளமான நடையில் பேச்சு பீறிட்டு வெளிவரும். இவரது கருத்துக்கேற்ப கன்னட வாக்கியங்கள் ஆற்ருெழுக்காக அடுக்கிவரும். கச்சிதமான சொற்ருெடர்கள் கருத்தாழத்தை மொண்டு நிற்கும். உணர்வின் வெளிபாட்டுக்கு ஏற்ப சொற்கள் தவழ்ந்தும் நடந்தும் விரைந்தும் இவர் பேச்சில்களிநடம் புரியும். துன்பம் காதல் போன்ற மெல்லிய உணர்வுகளை விளக்கும் போது சொற்கள் இவருடைய குரலினிமை யோடு இழைந்து அவையோரின் நெஞ்சங்களை நெகிழச் செய்யும், தகுந்த சொற்களுக்காக இவர் தயங்கியதே கிடையாது. தகுந்த சொல்லாட்சிகள் நினைக்குமுன் இவர் நாவில் போட்டியிட்டுக் கொண்டு முன்வந்தன. அணியணியான அடுக்குச் சொற்களும் இனச்சொற்களும் நம்மைப் பயன்படுத்த மாட்டாரா என்று ஏங்கும். அவை அவர் நாவிலும் இடம் பெறும்.

அணிநயம் மிகுந்த அடுக்குச் சொற்களை இவர் ஆளும்போது, தலைப்பின் மையக்கருத்திலிருந்து விலகுவது போல் தோன்றினுலும் மையக் கருத்தின் நுட்பத்தைத் தெளிவுபடுத்தவே அத்தகைய சொற் களைக் கையாளுகின்ருர் என்பதை எவரும் புரிந்து கொள்வர். தருக்க முறையோடும் தொடர்பருத இயைபோடும் அமைந்த இவரு டைய பேச்சு தத்துவ விளக்கமாக இருக்காமல் கவிதை நயம்பட இருக்கும். சில நேரங்களில் கருத்தாழத்தால் ஈர்க்கப்பட்டு தலைப்பி லிருந்து சில நிமிடம் விலகிச் செல்ல நேர்ந்தாலும், அவையோர்க்கு அது வெறுஞ்சொற்பொழிவாக இராமல் சிந்தைக்கு விருந்தளிக்கும் மனந்திறந்த பேச்சாக இருக்கும்.

அவரைச் சொற்பொழிவுகளுக்கு அழைக்கக் காத்துக் கிடந் தனர். ஆங்கிலங்கற்றவர்கள் சேஃசுபியரைப் பற்றியும் வேர்டுசு வொர்த்தைப் பற்றியும் சொற்பொழிவாற்ற வேண்டினர். கன்னட அன்பர்கள் பம்ப கவிஞரைப் பற்றியும் இரன்ன கவிஞரைப் பற்றியும் கன்னட மறுமலர்ச்சி குறித்தும் சொற்பொழிவாற்றுமாறு அவரை வேண்டினர். இறைப்பற்று மிகுந்தவர்கள் மதத்தைப் பற்றியும் மதத்தி லுள்ள மெய்ப்பொருள் விளக்கம் பற்றியும் பேசவேண்டினர். ' சமயப்

பெரியோர்களின் பொறுப்பு' என்னுந் தலைப்பு அவருக்கு மிகவும் பிடித்த தலைப்பாகும். அரசியல் கட்சிக்காரர்கள் கருநாடக மாநில ஒருங் கிணைப்பு குறித்துப் பேசுமாறு வேண்டினர். அவருடைய சொற்பொழி வைக் கேட்பதற்காகவே புதுப்புது மன்றங்கள் தோன்றலாயின. மக்கள் ஆயிரக்கணக்கில் குழுமினர். சில சமயங்களில் பயணம் செய் யும் வண்டியில் ஏற்படும் கோளாறுகளால் மணிக்கணக்கில் காலங் கழித்துச் சென்ருலும் மக்கள் தனக்காக நெடுநேரம் காத்துக் கொண் டிருப்பதை கண்டிருக்கிருர். ஒருமுறை மாலை ஆறுமணிக்குத் தொடங்க வேண்டிய சொற்பொழிவு நள்ளிரவுக்குப்பின் தொடங்கிய நிகழ்ச்சியைப் பற்றியும் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஸ்ரீகண்டய்யா தனக்குப் பேரும் புகழும் பெருகி வருவதறிந்து மகிழ்ந்தார். தனக்குக் கிடைத்த புகழைவிட கன்னட நாட்டின் மீது தான் கொண்ட காதலும், கன்னடமக்கள் தன்மீது பொழியும் அன்பும் தன்னை நாடு முழுவதும் ஓய்வின்றி அலைய வைக்கிறது என்பதையும் உணர்ந்தார்.

புகைவண்டியும், பேருந்தும் போகாத ஊர்களாக இருந்தாலும் பாதைகள் சீர்கெட்டிருந்தாலும், கட்டை வண்டியிலோ கால் நடை யாகவோ போக வேண்டியிருந்தாலும் போக்குவரத்து வாய்ப்புகளைச் சிறிதும் கருதாமல் 'அழைப்புகளை மறுக்காமல் ஏற்று, தங்கு தடை யின்றி சொற்பொழிவாற்றச் சென்றுவிடுவார். மைசூர் எல்லைக்குட் படாத கன்னடப் பகுதிகளிலிருந்து அழைப்பு வந்து விட்டால் மறுக் காமல் உடனே ஏற்றுக் கொள்வதை முதற்கடமையாகக் கொண்டி ருந்தார். கன்னட நாட்டின் பலவிடங்களைப் பார்ப்பதற்காகப் பயணம் செய்வதிலும் மக்களைச் சந்திப்பதிலும் ஆர்வம் கொண்டி ருந்தார்.

ஒவ்வொரு இடமும் குறிப்பிடத்தக்க சிறப்புடையதாகவிருந்தது. பனவாசி நகரம் பத்தாம் நூற்ருண்டு பெருங்கவிஞன் பம்பனல் சிறப் பிக்கப்பட்ட பெருமைக்குரியது. அரிகரன் இராகவாங்கன் என்னும் புலவர் பெருமக்களைக் கண்டதும் விசயநகரப் பேரரசின் தலைநகரமாக விளங்கியதுமாகிய ஹம்பிநகரை அனைவரும் அறிவர். சாளுக்கியப் பேரரசர்களின் பாதாமி நகரும் கலைச்செல்வங்களுக்குப் பெயர்பெற்ற பேளுர் அளேபீடு என்னும் ஊர்களும் இத்தகைய சிறப்புடையன வற்றுள் சில.

ஸ்ரீகண்டய்யாவுக்கு நாடெங்கும் திரிந்ததெல்லாம் புண்ணியப் பயணமாயிற்று. அவர் ஆற்றிய சொற்பொழிவுகளெல்லாம் வழி பாடாயின. அவர் புகழ் வெறியில் மயங்கி வழிமாறிப் போய்க் கொண்டிருக்கிருர் என்று மாணவர் பலரும் சொல்லிக் கொண்டிருந் தது போலவே நானும் நினைத்திருந்தேன். மன்னராட்சிக்குட் பட்டி

ருந்த மைசூர் மக்களுக்கும் மைசூரிலிருந்து பிரிக்கப்பட்டிருந்த கன்னடப்பகுதிகளில் வாழ்ந்த கன்னட மக்களுக்கும் இடையில் ஒற்று மைப்பாலமாக அவர் விளங்குகிருர் என்னும் உண்மை எனக்கு இப் பொழுது தெளிவாயிற்று. அவருடைய இணையில்லாத இலக்கியப் படைப்புப் பணியை விட மக்களுள்ளத்தில் ஒற்றுமை (ஒன்றிப்பு) உணர்ச்சி கிளர்ந்தெழச் செய்த பணி ஒரு வகையில் மிகமிக இன்றி யமையாததாகும். கருநாடகத்திலிருந்த எந்தவொரு தனிப்பட்ட வரையும்விட ஸ்ரீகண்டய்யாவே ஒருங்கிணைந்த கருநாடகத்தை உரு வாக்குவதில் ஒப்பற்ற ஆற்றலுடையவராய் விளங்கினுர். கன்னட நாட்டுப் பண்பாடு மற்றும் இலக்கிய வரலாற்றில் இவர் சிறப்பிடம் பெற்றிருப்பதைப் போலவே கருநாடகத்தின் அரசியல் வரலாற்றிலும் மிக உயர்ந்த இடத்தைப் பெற்றிருக்கிருர்.

1938 முதல் 1942 வரை சாகித்தியபரிஷத்தின் தலைமை ஆட்சி யாளராக இருந்தார். அம்மன்றத்தின் மதிப்பாண்மைப் பதவியைத் தன் கல்லூரிப் பணியிலும் மேம்பட்டதாகக் கருதி உழைத்தார். ‘கன்னடநுடி’ என்னும் பெயரில் மாத இதழ் ஒன்று தொடங்கினுர். கன்னடக்கொடி (கன்னட பாவுட) என்னும் பெயரில் கன்னடப் பாடல்களின் தொகுப்பு நூலைப் பதிப்பித்தார். நெடுநாளாகவே கன்னட சாகித்தியபரிஷத்திற்குச் சொந்தமாக அச்சகம் தேவையென் னும் உணர்வு மேலோங்கியிருந்தது. அச்சகம் அமைப்பதற்காகத் தானே முதலில் நன்கொடையளித்து நன்கொடை திரட்டும் பணி யைத் தொடங்கி வைத்தார். பலவிடங்களுக்கும் பயணம் செய்து, சொற்பொழிவுகளாற்றி, கன்னட இலக்கிய மன்றமாகிய சாகித்திய பரிஷத்துக்கு உறுப்பினர்களைப் பெருமளவில் சேர்த்து இலக்கிய விழாக்களையும் மாநாடுகளையும் சிறப்புற நடத்தினுர்.

தான் விரும்பிய நற்பணிகளை அவர் செய்து வந்தபோதிலும், மிக உயர்வாக மதித்துப் போற்றப்பட்டு பாராட்டுகளும் பட்டங்களும் குவியப் பெற்றவர் என்ருலும், அவருடைய இறுதிக் காலத்தில் சில ஆண்டுகளாக அவர் மனச்சோர்வுற்றவராக-மகிழ்ச்சியில்லாதவ ராகக் காணப்பட்டார். அவரைப் பொறுத்தவரையில் அவர் ஒரு அறமுரைக்கும் மாதவரான அருள் நெஞ்சத் துறவி யென்பதில் ஐய மில்லை. துறவிகளும்கூட தாம் வாழுங் காலத்தில் போற்றுதலுக்கும் தூற்றுதலுக்கும் ஆளாவர் என்பது அனைவரும் அறிந்த உண்மை. பழமையில் ஊறிப்போன புலவரும் அறிஞரும் ஸ்ரீகண்டய்யாவின் தலைமையின் கீழ் கன்னடமொழி விரைந்து அழிவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது என்றனர்.

பழமை விரும்பிகளுக்கும் புதுமையாளர்களுக்கும் இடையில் தோன்றிய பகைமை நெடுங்காலம் நிலவியது. ஸ்ரீகண்டய்யா எதிர்ப்பு

களிடையில் வாழ்ந்து பழகிக் கொண்டார். யாரையும் தாக்கிப் பேசும் குணம் இயல்பாகவே இவருக்கில்லையாயினும் இருமுறை கருத்து வேறுபாட்டுப் பூசல்களில் அவர் தலையிட நேர்ந்தது. முதற் பூசல் அவருடைய நாடகத்தில் கதைத் தலைவனான அசுவத்தாமன் தற்கொலை செய்து கொள்வது தொடர்பானது. இது குறித்துப் பின்னர் கூறப்படும். இரண்டாவது பூசல் எல்லாவற்றிலும் முதற் சிக்கலாக எடுத்துக் கொள்ளப்பட்ட கருநாடகம் என்னும் சொல்லின் எழுத்துகளைப் பற்றியது. இப்பூசல்களால் நமக்கு ஒருபயனும் இல்லை.

அசுவத்தாமனின் தற்கொலை நிகழ்ச்சியை எதிர்த்த கடும்பழமை விரும்பிகளும் கருநாடகம் என்னும் சொல்லிலமைந்த எழுத்துகளை குறித்துச் சிக்கலை யுண்டாக்கிய புதுமை விரும்பிகளும் கற்றவர் நெஞ்சங்களுக்கு வெறுஞ்சுமையாகிவிட்ட இத்தகைய அற்பப் பூசல்களைக் கைவிட்டிருக்கலாம். இப்பூசல்கள் கசப்புணர்வையும் வெறுப்புணர்வையும் மிகுதியாக வளர்த்து விட்டதால் அதன் உணர்ச்சிக் கொந்தளிப்புகள் அவருடைய உள்ளத்தில் நீங்காத வடுவாக அமைந்து விட்டன.

ஸ்ரீகண்டய்யா அடுத்து கன்னட சாகித்திய பரிஷத்தின் மறுதேர்தலுக்கு நிற்க ஒப்பவில்லை. அவர் விருப்பத்தை ஏற்று இத்தேர்தலின் போது அவர் பெயரை யாரும் முன்மொழியவில்லை. புதிதாகத் தெரிந்தெடுக்கப்பட்ட துணைத்தலைவரிடம் தன் பொறுப்புகளை ஒப்படைத்தார். இந்நிகழ்ச்சி எல்லோருக்கும் வருத்தம் தந்தது. பல்கலைக் கழக வேலையினின்றும் அதே ஆண்டில் ஓய்வுபெற்றார்.

அரசுப் பணியிலிருந்து ஓய்வு பெற்றாலும் ஸ்ரீகண்டய்யாவுக்கு அது ஓய்வாகவோ ஒழிச்சலாகவோ படவில்லை. எழுத்தறிவைப் பரப்பும் குழுவிற்குத் தலைவராக அவர் தெரிந்தெடுக்கப்பட்டார். அப்பதவியில் 1944 வரை நீடித்தார். அதே ஆண்டில் தார்வாரிலுள்ள கே. ஈ. வாரியக் கலைக்கல்லூரியின் முதல்வராக அமர்த்தப் பட்டார். பல நண்பர்களின் அறிவுரைக்கு எதிராகவே இப் பதவியை ஏற்றுக்கொண்டார். அப்பணியில் அவர் மனநிறைவாக இருக்கமுடியவில்லை. அவருடைய உடல் நலம் நாளுக்கு நாள் குறைபடலாயிற்று. சருக்கரை நோயும் இரத்த அழுத்த நோயும் அவரை வாட்டத் தொடங்கின. தன் உடல் வலிமை தாங்காத அளவுக்கு இதற்குமுன் அவர் கடுமையாக உழைத்ததன் விளைவே இது. தார்வாரில் ஜனவரி ஐந்தாம் நாள் அவருக்கு வாழ்வின் இறுதி நாளாயிற்று. அவர் பிரிவைத் தாங்காமல் கருநாடக மாநிலம் முழுதும் துயரில் தவித்தது. செய்தித்தாள்களிலும் இதழ்களிலும் மாதக் கணக்கில் அவர் மறைவுக்கான இரங்கல் செய்தி

களும் அவருடைய சேவையைப் பாராட்டிய நன்றி யுரைகளும் புகழுரைகளும் வந்த வண்ணமிருந்தன. ஒருங்கிணைந்த கருநாடகத்தைக்காண அவர் கண்கள் கொடுத்துவைக்கவில்லை. ஆனால் ஒருங்கிணைந்த கருநாடகத்தை உருவாக்கிய ஒப்பற்ற சிற்பியாகக் கருநாடகம் அவரை நினைவு கூர்ந்து நன்றி செலுத்துகிறது.

பகுதி இரண்டு

# அவருடைய காலமும் சூழலும்

1916-ஆம் ஆண்டில் ஒருநாள் உயர்நிலைப்பள்ளி இலக்கிய மன்ற மாணவச் செயலர் இருவர் பேராசிரியர் ஸ்ரீகண்டய்யாவைக் காணவந்தனர். அவருள் நானும் ஒருவன். ''இக்கால இந்தியாவினும் பழங்கால இந்தியாவே சிறந்தது'' என்னுந் தலைப்பைப் பெருமிதத்தோடு சொற்போருக்குரிய தலைப்பாக நாங்கள் தெரிந்தெடுத்திருந்தோம். பேராசிரியர் ஸ்ரீகண்டய்யாவை இத்தலைப்பு குறித்து உயர்நிலைப்பள்ளியில் பேச வைப்பது எங்கள் பதவிக்குப் பெருமையாகவும் திறமைக்கு அடையாளமாகவும் இருக்கும் என்று எண்ணினோம்.

நாங்கள் அவருடைய அறைக்குள் நுழைந்தவுடன் படித்துக் கொண்டிருந்த நூலில், பதிந்திருந்த தன் பார்வையைத் திருப்பிக் கடுப்பாக எங்களைப் பார்த்தார். அவர் பார்த்த பார்வையில் ஏதோ நேரமல்லாத நேரத்தில் அறைக்குள் புகுந்து விட்டதாக எண்ணி உணர்வு ஒன்றிப்போய், பேச நாவெழாமல் நின்றிருந்தோம்.

நாங்கள் செயலற்று நின்ற நிலை அவருடைய உள்ளத்தை இளகச்செய்தது. 'நல்லது, நான் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும்?' என்று வினவினார். நாங்கள் வந்த நோக்கத்தையும் சொற்போருக்குரிய தலைப்பையும் கூறியவுடன் அவருடைய இதழ்களில் புன்னகை அரும்பியது. 'இக்கால இந்தியாவை விட பழங்கால இந்தியாவே சிறந்தது. ஏனைய நாட்டுப் பொருள்களைவிட இந்திய நாட்டுப் பொருள்களே சிறந்தவை, இந்தியாவில் பழங்காலப் பொருள் புதுக்காலப் பொருளைவிட உயர்ந்தது, இது ஒரு தன் மேம்பாட்டுக் கொள்கையன்றோ?' என்றார். தன்மேம்பாட்டுக் கொள்கை என்றால் என்னவென்று எங்களுக்குத் தெரியாவிடினும் அவருடைய மறுமொழி எங்களுக்குப் பெருமகிழ்ச்சியளித்தது.

எங்களை உட்காரச் சொல்லியவாறே சற்று அமைதியும் இனிமையும் கலந்த குரலில், ‘நீங்கள் குறிப்பிடும் நாளில் நான் வேறு இடத்தில் சொற்பொழிவாற்ற ஒப்புக் கொண்டிருக்கிறேன். அந்த நாளில் வர முடியாதே’ என்ருர். இந்நிகழ்ச்சியை நான் சுட்டிக் காட்டுவதன் நோக்கம் ஸ்ரீகண்டய்யா எத்துணை இனிய இயல்பினர் என்பதை எடுத்துக் காட்டுவதற்கேயாகும்.

ஸ்ரீகண்டய்யா என்ருல் கண்டிப்பானவர் என்று பொருள். அவர் மடமையின் எதிரி; மூடநம்பிக்கைகளை ஒப்புக்கொள்ளாதவர்; பத்தாம் பசலிக் கொள்கைகளின் பகைவர் அவர். உள்ளத்தில் பொய்மை குடிபுக முடியாது. பழங்கால இந்தியாவாயினும் இக்கால இந்தியாவாயினும் நாட்டுப்பற்று எனும் போர்வை தன் கண்ணை மூடிவிடாமல் நடுநிலையுடன் எதனையும் நுனித்தறியும் இயல்புடையவர்.

அவர் கடுமை நிறைந்த கண்டிப்பாளராகவும் அன்பு ஊற்றெடுக்கும் இனிய இயல்பினராகவும் ஆக, இருவேறு நிலைகளுக் கிடையில் ஊசலாடும் பண்பினராயினும் தன் கடுமை நிறைந்த போக்குக்காக வருந்தியதுண்டு. இவர் குறுகிய மனப்பான்மைகளை எதிர்ப்பவராகவும் வெறுமனே தாய் நாட்டைப் புகழ்வதைச் சிறிதும் பொறுத்துக் கொள்ளாதவருமாதலால், இவரைக் குறுகிய நோக்கினர் என்றும் நாட்டுப்பற்றில்லாதவர் என்றும் சிலர் குற்றஞ்சாட்டினர்.

இதனை நன்கு புரிந்து கொள்ள வேண்டுமாளுல் இந் நூற்ருண்டின் தொடக்கத்தில் இந்தியாவில் எத்தகைய அகச் சூழ்நிலை நிலவியது என்று அறிவது இன்றியமையாதது. இந்தியரின் மனப்பாங்குகளில் மாற்றம் விளைவித்த ஆங்கில ஆட்சியின் காலச் சூழல் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். நன்மை தரும் வகையில் அல்லது தீமை வகையில் இந்தியரின் அனைத்து வாழ்க்கைத் துறைகளிலும் ஆங்கிலேயரின் வாழ்க்கைக் கூறுகளும் செல்வாக்கும் ஊடாட்டம் பெற்றிருந்தது. இதனுல், இந்தியரின் வாழ்க்கை முறைகளில் முரண்பட்ட மாறுதல்கள் விளைவது தவிர்க்க முடியாததாயிற்று. இதனுல்தான் நாங்களும், ‘இக்கால இந்தியாவைவிட பழங்கால இந்தியாவே சிறந்தது’ என்னுந் தலைப்பைச் சொற்போருக் குரிய தலைப்பாகத் தெரிந்தெடுத்திருந்தோம். ஸ்ரீகண்டய்யா அவர்களும் இத்தலைப்பில் பேசும்போது காரசாரமான திறனுய்வுகளைப் பொழிந்து தள்ளினுர். அதனைப் பொதுவான விரிவுரை என்பதை விடக் கடுமையான இடித்துரை என்பது பொருந்தும்.

எங்களை நாங்களே நன்கு மதித்துக் கொள்வதற்காகப் பழங் கால இந்தியா வெள்ளையரால் ஆளப்பட்ட பிற்கால இந்தியாவிலும் பலவகைகளில் சிறந்து விளங்கியது என்றும், வெள்ளையரினும்

நாங்கள் உயர்ந்தவர்கள் என்றும், நம்பவேண்டியவர்களானோம். வெள்ளையரால் இழிவாக நடத்தப்பட்டதால் பல்லாண்டுகளாக ஊறிப்போய்விட்ட தாழ்வு மனப்பான்மையும் எங்களை விட்டகல வில்லை. ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஒன்றுக்கொன்று முரணான உயர்வு மனப்பான்மையும் தாழ்வு மனப்பான்மையும் ஒருசேரக் குடி கொண்டன. பழங்கால இந்தியாவின் பெருமைகள், பண்பாடு, மரபு ஆகியவை உயர்ந்தவை என்னும் மதிப்பால் உயர்வு மனப் பான்மை மேலோங்கியது. வெள்ளையரின் நாகரிகத்தில் தோன்றிய காதலும் அதே நேரத்தில் இவர்கள் நம்மைக் கொத்தடிமை செய்த பரங்கியர் என்ற வெறுப்பும் உள்ளத்தில் நிழலாடின.

ஸ்ரீகண்டய்யா முந்திய கருத்திலிருந்து விடுபட்டார். பிந்திய கருத்தும் அவர் உள்ளத்தில் காலூன்ற முடியவில்லை. ஏனெனில் அவர் வெள்ளையரைக் கண்டு மயங்கி விடவில்லை. வெள்ளையரைச் சரியாக எடையிட்டுநுனித் தறிந்து அனைத்துத் துறைகளிலும் தான் அவரினும் மேம்பட்டு விளங்க முடியும் என்று நிறுவிக் காட்டினார். ஐரோப்பிய இலக்கிய வளமும் பண்பாட்டுக் கூறுகளும் அவரால் மதிக்கத் தக்கனவாக இருந்ததால், மேனாடுகளைப் பொதுவாகவும் இங்கிலாந்தைச் சிறப்பாகவும் போற்றி வந்தார்.

அவர் இங்கிலாந்துக்குச் 'சூட்டிய புகழ் மாலைகள்' இவர் இந்தியாவைச் சிறிதும் மதிக்கவில்லை போலும் என்னும் தவறான எண்ணத்தை மக்களிடைத் தோற்றுவித்ததும் உண்டு. இந்தியாவை விட இங்கிலாந்து நாட்டு இலக்கியங்களையும் கல்வி நிறுவனங்களையும் பண்பாட்டையும் மிகுதியாக விரும்பினார் எனப் பொதுவாகக் கூறப் படுவது நடுநிலையற்ற கூற்றாகும். இத்தகைய பேச்சுகளைக் குறித்து, ஸ்ரீகண்டய்யாவே அப்பொழுது தக்க விளக்கம் தந்திருக்க வேண்டும் என்று விரும்பியவரும் உண்டு. பழங்கால இந்தியா ஒவ்வொரு இந்தியனும் பெருமைப்படும் அளவுக்குச் சிறப்புற்றிருந்தது என்பதில் அவருக்கு அழுத்தமான நம்பிக்கையிருந்தது.

கடந்த கால இந்தியா என்பதிலும் மிகப்பழங்கால இந்தியா பெருமை வாய்ந்திருந்தது என்று தெளிவாகக் குறிப்பிடுவார். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழும் பலர்க்கும் பழங்கால இந்தியா வின் பெருமை தெரிந்திருக்க வாய்ப்பில்லை. வடமொழி இலக்கியங் களையும் இந்திய மெய்ப்பொருள் நூல்களையும் மரபுவழியில் கற்ற ஒரு சிலரும், பன்னாட்டுக்கலை இலக்கியங்களைத் திறனாய்வு செய்யவும். பல்வேறு பண்பாடுகளை ஒப்பு நோக்கி மதிப்பிட்டறியவும் ஆற்றலற்ற வராயிருந்தனர். இலக்கியம் மெய்ப்பொருள் நூல்கள் தவிர, ஏனைய அறிவுத் துறைகளில் இந்தியா பெற்றிருந்த கடந்த கால வெற்றிகளைக் குறித்து, இந்த மரபுவழிப்படிப்பாளிகள் ஒருசிறிதும் அறிந்திருக்க

வில்லை. மேனாட்டுப் பண்பாடு வெற்றிகரமாகவும் வன்முறையாகவும் விரைந்து திணிக்கப்படுவதாக அஞ்சியதோடு அதன்மீது அவ நம்பிக்கையும் கொண்டனர்.

ஸ்ரீகண்டய்யா அவர்கள் கல்லூரியில் பணியாற்றத் தொடங்கிய போது, ஆக்சுபோர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகங்களின் அடிப் படையிலமைந்த இந்தியப் பல்கலைக் கழகங்களில் பயின்று வெளி வந்த புதிய படிப்பாளிகளும் தாழ்வு மனப்பான்மையால் தாக்கப் படாதவர்கள் அல்லர். இந்தியாவின் பெருமையை நிலைநாட்டத் தக்க வகையில் நுட்பமான ஆழ்ந்த அடிப்படைக் கருத்துகள் பழமையில் உள்ளனவா எனத் தேடத் தொடங்கினர். அவர்கள் ஐயத்திற்கிடமின்றி இந்தியாவைப் பெரிதாக மதித்தனர். இந்தியாவின் குறைபாடுகளாகத் தெரிந்தனவற்றைத் தயங்காமல் ஒப்புக்கொண்டதோடு அக்குறைபாடுகளை நீக்க, எதிரிட்டுப்போராடி புது மறுமலர்ச்சிகளை உண்டாக்க முயன்றனர். விழிப்புணர்ச்சியைத் தூண்டும் புதிய படைப்புகள், உயர்நிலை இலக்கியத் திறனாய்வுகள், வரலாற்றுப் பின்னணியில் உதித்த உணர்வுகள் ஆகியவை அவர் களுக்கு வழிகாட்டின. பழமை என்பதால் கண்மூடித்தனமாகப் போற்றவுமில்லை; புறக்கணிக்கவுமில்லை. அதே நேரத்தில் உலகில் பரவத் தொடங்கிய புது நாகரிகக் கூறுகளுக்கு இரையாகிவிடாமல் அவற்றையும் வரவேற்றனர்.

இத்தகைய படிப்பாளிகளின் குழுவில்தான் ஸ்ரீகண்டய்யா இருந்தார். அவருடைய ஆர்வம் எல்லாம் பழமையைவிட (புதுமையின் பக்கமே) எதிர் காலத்தையே நோக்கியதாக இருந்தது. ஆனால், பழங்காலத்தைப் பற்றிய அறிவும் விளக்கமும் மதிப்பீடும் வருங்காலத்தை நமக்கேற்ற வகையில் அமைத்துக் கொள்ள உதவும் என்று அறிந்திருந்தார். ஆதலால், சமஸ்கிருத நூல்களைக் கற்பதில் ஆர்வம் காட்டினார். எனினும், கன்னடத்திற்கு முதலிடமும் தமிழுக்கு அதற்கு அடுத்த இடத்தையும் தந்திருந்தார். சமஸ் கிருதத்தை அவர் மிகுதியாகக் கற்கவில்லையோ என்று பிறர் நினைக்கும்படி அவர் சமஸ்கிருதத்தைக் குறைவாகவே கையாண்டார். சமஸ்கிருத அறிஞர்கள் இவரை இதற்காக இடித்துரைத்துக் கன்னடம் இவரால் குறைவுறுகிறது; சிறுமையடைகிறது என்றனர். அவர் சமஸ்கிருதத்தைக் குறைத்துப் பழிக்கவில்லை; கன்னடத்தை அதிகமாக மதித்தார் என்றுதான் சொல்லவேண்டும்.

இருபத்தேழாண்டு இளைஞராக இருந்தபோதே கன்னடத்தின் வளர்ச்சியில் அவருக்கிருந்த நடுநிலையான நோக்கு, அவர் தார்வார் நகரில் 'கன்னடம் தலையெடுப்பது எவ்வாறு?' என்னும் தலைப்பில் ஆற்றிய சொற்பொழிவில் வெளிப்படையாகத் தெரிகிறது. கன்னடம்

தலையெடுத்தாக வேண்டும். தாய்மொழியான கன்னடத்தின் நிலை, தாய்நாட்டு நிலப் படத்தில் இடம்பெற்றிருக்கும் வெற்று உறவு நிலைக்குத் தாழ்ந்திருப்பது பொறுக்க முடியாதது. கன்னடத்தின் வளர்ச்சி ஒருபுறம் சமஸ்கிருதத்தாலும் மறுபுறம் ஆங்கிலத்தாலும் நசுக்கப்பட்டுள்ளது. சமஸ்கிருதம் தேவமொழி, வேத மொழி, பழம் பண்பாட்டின் கொள்கலம் என்றெல்லாம் கூறுவர். சமயப் புலமை யாளர்களின் பார்வையில் சமஸ்கிருதம் ஒன்றே போற்றி வளர்க்கப் படவேண்டிய மொழியாக இருந்தது. ஆங்கிலம் ஆட்சி மொழி; ஆட்சியாளரின் மொழி; பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கல்வி வாயிலான பாடமொழி. எனவே ஆங்கிலத்தில் புலமை பெறுவது கல்வித் தகுதிக்கு மெருகு சேர்ப்பதாக இருந்தது. தாழ்ந்த பணிகள் தவிர மற்றெல்லா அரசுத்துறை அலுவலகங்களிலும் பணி பெற ஆங்கிலத்தில் நல்ல திறமையிருப்பது இன்றியமையாத தாயிற்று. கன்னடத்தைத் தாய்மொழியாகக் கொண்ட படிப்பாளி களும் தம் கன்னட நண்பர்களுடன் பேசும்போது ஆங்கிலத்தில் அல்லது ஆங்கிலம் கலந்து கன்னடத்தில் பேசினர். இவ்வாறு பேசுவது இயல்பானதாகக் கருதப்படலாயிற்று.

கன்னட மறுமலர்ச்சி இயக்கத்தின் தானைத் தலைவராக ஸ்ரீகண்டய்யா நாட்டவரால் அறியப்பட்ட சின்னுட்களில், மைசூர் மன்னர் கல்லூரிப் பேராசிரியர் என்னைப் பார்த்து, 'உங்கள் தலைவர் ஸ்ரீகண்டய்யா கன்னடத்தைப் பற்றி இல்லாத குழப்பங்களை ஏன் உண்டாக்கி விடுகிறுர்? அவர் செய்கையில் ஏதேனும் பொரு ளுண்டா?' என வினவினுர். அவருக்குக் கன்னட மறுமலர்ச்சித் திட்டம் விளங்காத புதிராக இருந்தது. மாந்தரின் வாழ்க்கைக்கும் கன்னடத்திற்கும் என்ன தொடர்பு என்று அவருக்குத் தெரியவில்லை என்பதைப் புரிந்து கொண்டேன்.

இத்தகைய சூழ்நிலையில் தான் ஸ்ரீகண்டய்யா கன்னட மறு மலர்ச்சிக்காக வெற்றிக் கொடி உயர்த்திஞர். கன்னடத்தின் நிலை பற்றி ஒரு அறிக்கை தருமாறு கேட்டிருந்தால், அது பின்வருமாறு இருந்திருக்கும்.

நம்மில் பலரும் அவர்கள் தாய்மொழி கன்னடம் என்கிறோம். அது உண்மையே. தாய் மொழியென்ருல் தாயிடம் கற்றுக் கொண்ட அளவே போதுமானது. மனவளர்ச்சிக்கும் மெய்ப் பொருள் உண்மை தெளியவும் ஆங்கில அறிவும் சமஸ்கிருதக்கலப்பும் தேவை. இவற்றைக் கன்னடம் பயில்வதால் பெறமுடியாது. அதனுல் தான் கன்னடம் பெருமளவுக்குச் சமஸ்கிருதத்தைச் சார்ந்த மொழியாக இருக்கிறது. இன்றைய உலகில் சமஸ்கிருதம் கற்ருல் மட்டும் கல்வி நிரம்புவதில்லை. சமஸ்கிருதக் கல்வியும் குறையுடை

யதே. ஆங்கிலக் கல்வி ஒன்றுதான் அறிவுத்துறை மற்றும் பண்பாடு நாகரீக வளர்ச்சிகளை நமக்கு அள்ளித் தரும் வாயிலாக இருக்கிறது.

இன்றைய உலகின் நடைமுறையிலும் நூற்றுக்கு நூறு பங்கு ஆங்கிலம் அனைத்து வாழ்க்கைத் துறைகளிலும் பயன்பட்டு வருவதை நாம் மறுக்க முடியாது. ஆங்கிலம் பயன்படும் அளவுக்குக் கன்னடமும் சமஸ்கிருதமும் பயன்படவில்லை என்பதையும் நினைத்துப் பாருங்கள்.

தாளிகை(பத்திரிக்கை) உலகம், இயற்பியல் (Physics), மன்பதையியல் தொடர்பான அறிவியல் துறைகள், மெய்ப்பொருளியல், இலக்கியம், நகைச்சுவை இலக்கியம், உள்ளத்தைத் தொடும் உணர்ச்சி வெளிப்பாடுகள் போன்ற பல்வேறு திறந்தனவாகிய துறைகளில், ஆங்கில மொழி அளப்பரிய இலக்கியச் செல்வம் பெற்றுள்ளது. புதினம், சிறுகதை, நாடகம், கவிதை, கட்டுரை, அங்கதம் குறிப்பிட்டுக் கூறத்தகுந்த துன்பியல் நாடகம் போன்ற துறைகளில் ஆங்கிலம் பெற்றுள்ள வளர்ச்சி சொல்லி முடியாதது.

எல்லாத்துறைகளில் இலக்கியவளம் பெற்றுள்ள ஆங்கிலத்திற்கு எதிரே கன்னடம் சமமாக நிற்க முடியுமா? நடைமுறையில் நிகழக் கூடியதையே நாம் நினைத்துப் பார்க்க வேண்டும். ஆங்கிலம் ஒரு நூற்றுண்டுக்கு மேல் நம்மோடு இரண்டறக் கலந்து விட்டது. ஆதலால், நாம் அதனைக் கையாள்வது தவிர்க்க முடியாதது. ஆங்கிலம் இந்தியரிடையிலும் வெளியுலகத்துடனும் இணைப்பு மொழியாக விளங்கி வருகிறது.

கன்னட மறுப்புரையாளரின் மேற்கண்ட கருத்துகளை அமைதியாகக் கேட்டு அவை உண்மை என ஒப்புக் கொண்டபிறகு ஸ்ரீகண்டய்யா மறுமொழி கூறியிருந்தார். “கன்னடத்திலிருந்து நாம் பெற என்ன இருக்கிறது?” என்று நடுநிலையுடன் குத்தலாக வினவினர். இதனைக் கேட்ட பலரும் ஸ்ரீகண்டய்யா கன்னடப் பகைவரைப் போல் கன்னடத்தின் மீது பற்றுக் குறைந்தவரோ என முகம்சுளித்ததும் உண்டு.

அவரது பிற்கால வாழ்க்கையில் அவர் கன்னட இலக்கியத்தை வானளாவ உயர்த்திப் புகழ்ந்திருப்பதைக் கண்டித்துக் குறை கூறியவரும் உண்டு. அப்படியுரைத்த காலம் வேறுனது என்பதையும் அந்தக்காலச் சூழலுக்கு அது மருந்தாக அமைந்தது என்பதையும் நாம் நினைவு கூறவேண்டும்.

கன்னடத்தில் என்ன இருக்கிறது என்னும் இடித்துரை உறங்கிக் கிடக்கும் கன்னடத்தாருக்கு விழிப்புணர்ச்சியும் எழுச்சி

யும் ஊட்டவல்ல ஊக்கத் தாக்குதலாக இருந்தது. கன்னடத்தைப் பற்றிய புகழுரை கன்னடியார்க்குத் தன்னம்பிக்கையை ஊட்ட வல்லதாக இருந்தது. கன்னடத்தைப் பற்றி அவர் கூறிய கருத்து களின் சுருக்கம் பின்வருமாறு :

தொல்கதை (இதிகாசம்) மற்றும் சமய இலக்கியங்களின் காலம் (சமயம் நெடுங்காலமாக நம் வாழ்வோடு ஒன்றி வந்துள்ளது) முன்பே முடிந்து விட்டது. நாம் சமஸ்கிருதத்திலிருந்து ஏராள மாகக் கடன் வாங்கியிருக்கிறோம் அன்றோ? நீங்கள் இவ்வாறு கூறினால், பம்பனும் நாரணப்பனும் வியாசனைப் பின்பற்றிக் கன்னடத்தில் பாரத நூல்களைச் செய்தனர் எனினும், ஒவ்வொரு வரும் தத்தமக்கு இயைந்த நோக்கில் பாரதத்தைப் புதுமைக் காப்பியமாகக் கன்னட இலக்கிய வகைமைக்குகந்த படைப்பாகச் செய்துள்ளனர் என்றறிதல் வேண்டும்.

பழங்கதைகளை இக்கால உலகத்திற்கேற்ப கற்பனைத் திறத் தோடும் கவிநயத்தோடும் படைத்தளிக்க முடியாத கவிஞர்களைக் காணும்போது பழங்கதைகளைத் திருப்பிச் சொல்வதினால் ஒரு பொருளும் இல்லையென்று தோன்றுகிறது. சொல்லணிகள், ஓசை நயங்கள், வெற்றுக் கவிஞர்களை இகழ்வது, தற்புகழ்ச்சி, அளவிறந்த வண்ணனைகள், ஆகியவை மிகுந்திருக்கக் காண்கிறோம். பூங்காவில் மகிழ்தல், நிலாவில் உலாவுதல் (நிலாப்பயன் நுகர்தல்), புனல் விளையாட்டு ஆகியவற்றுக்காகவே இரண்டு காண்டங்கள் பாடப் பட்டிருக்கும். பெருமைகளின் பெருக்கமும், கற்பனையும், கனவுலகின் வண்ணனைகளும் நூலில் நிரம்பியிருக்கும். இத்தகைய காப்பியங்கள் புலவர்களுக்கே அமைந்தவை. பொதுமக்களுக்கு ஏற்றவையென்று சொல்லமுடியாது. சில சமயங்களில் புலவர் களின் திறமை காட்டி எழுதிய அக்காப்பியங்கள் கன்னடத்தில் எழுதப்பட்டவைதானா என்ற ஐயுறவும் தோன்றிவிடும். இத்தகைய காப்பியம் ஒன்றில் நாலடியுள்ள ஒரு செய்யுளைச் ஸ்ரீகண்டய்யா எடுத்துக்காட்டி, ஒரே ஒருசொல் மட்டும் கன்னடச் சொல்லாக இருப்பதையும் மற்றெல்லாச் சமஸ்கிருதச் சொற்களும், தாடை முறிந்து பல்லுடைபடும் அளவுக்குக் கடுமையான ஒலிப்புடையன வாக இருப்பதையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

கன்னடத்திலுள்ள இத்தகைய பழங்கால மற்றும் இடைக்கால இலக்கியச் செல்வங்கள் நமக்குப் போதாதா என்று பெருமிதத் தோடு கேட்பவர்களைப்பார்த்து, நான் உங்கள் கருத்தை மறுப் பதற்குப் பொறுத்தருள வேண்டும். நீங்கள் குறிப்பிடும் இந்த இலக்கியங்கள் கன்னடமொழிக்குப் போதாதவை. தவறான நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் இருக்கும் வரை நம் கண்களுக்கு இந்தக் குறைபாடு தெரியாது. இடைத்தர மதிப்புடைய ஒன்று முதல்

தரமானதாகாது ; தூய்மையானதாகக் கருதப்படாது. பாதி பழுத்த காய், பழம் என்னும் பெயரைப் பெருது என்று கூறினர்.

நான் கூறும் இந்தக் குற்றச் சாட்டுகளைக் கன்னடத்தின் வளர்ச்சியைப் புறக்கணிப்பதற்கும் குறைத்து மதிப்பிடுவதற்கும் கூறுவன என்று எண்ணிவிடாதீர்கள் என்று அவையினரை எச்சரித்தார். கன்னடியர் அனைவரும் உள்ளது போதும் என்னும் அறியாமையில் மூழ்கி, தாய்மொழி வளர்ச்சியில் ஊக்கம் காட்டாமல் மந்தமாக இருப்பதைத் தவிர்க்கவே இவ்வாறு எச்சரித்தார்.

‘ போதாது என்னும் மனக்குறைபாடே மாபெரும் முன்னேற்றங்களின் வளர்ச்சிப்படி ’ என்னும் பொன்மொழியை அவர் அடிக்கடி விரும்பிக் குறிப்பிடுவார். கன்னட வளர்ச்சிக்குத் தடைக்கல்லாக இருக்கும் குறைபாடு எது என்னும் உணர்வே அக்குறைபாட்டைக் களையும் சுடர்மிகு கருவியாக மாறிவிடும்.

பம்ப கவிஞரும் இரன்ன கவிஞரும் இயற்றிய காப்பியங்களிலிருந்து மேற்கோள்களை எடுத்துக் காட்டி, இப்போது கன்னடம் பழைய இலக்கியப் பெருமையை மீண்டும் பெறவேண்டும் என்றும், அதன்பிறகு புத்திலக்கியப் பரப்பைக் கன்னடத்தில் பெறவேண்டும் என்றும் கூறுவார். அவர் தார்வாரில் நிகழ்த்திய சொற்பொழிவு இனிச் செய்யவேண்டிய பணிகளுக்கு வடிவமைப்புத் திட்டமாக இருந்தது.

இன்றைய நிலையில், எழுபதாண்டுகளுக்கு முன்பு ஸ்ரீகண்டய்யா வெளியிட்ட ஆக்கப் பணித்திட்டங்கள் அதிகமானவையாகத் தோன்றலாம். ஆனல், அன்றைய சூழலில் அவர் வெளியிட்ட கருத்துகள் பலரிடை முரணான எண்ணங்களையும் கருத்து மோதல்களையும் உண்டாக்கின. கறையானுக்கு இரையாகுமுன் பழைய ஓலைச்சுவடிகளைத் திரட்டி அவற்றை உடனே நன்கு பதிப்பித்து வெளியிடவேண்டும். ஓலைச்சுவடி திரட்டும் பணியில் நாம் ஈடுபட வேண்டும் என்ருர். அது ஒப்புக்கொள்ளத்தக்கதே, வெளியிடத் தக்க ஓலைச்சுவடிகளைப் பதிப்பிக்கும் போது பழைய இலக்கியம் எது என்று வரையறுப்பதில் சிக்கல்கள் எழுந்தன.

கன்னடத்தில் இலக்கிய வரலாறு, மற்றும் மொழி வரலாறு நூல்களை எழுதும் பணியை ஊக்குவிக்க வேண்டும் என்னும் கருத்தை வெளியிட்டார். அக்கருத்து வரவேற்கப்பட்டது. ஆனல் இலக்கிய வரலாறும் மொழி வரலாறும் எழுதுபவர்களும் கற்பிப்பவர்களுக்கும் தவருமல் ஆங்கில அறிவும் புதுமுறை (தற்கால) இலக்கியத் திறனாய்வுப் புலமையும் நிரம்பியவராய் இருக்க வேண்டும் என்று அவர் வலியுறுத்தியபோது, மரபு வழி கல்வி கற்ற பழம் புலவர்களுக்கு அது எரிச்சலூட்டியது. அந்நாளில் பொதுவாகக் கன்

னடம் கற்பிப்பவர்க்கு, சமஸ்கிருதம் புலமை யிருந்தால் போதும் என்று கருதப்பட்டது. என்றாலும், கன்னடம் கற்பிப்பார்க்கு ஒரு பயிற்சியாயினும் தரவேண்டும் என்பதை ஒப்புக் கொண்டனர். ஆனால், கன்னடம் கற்பிப்பார் ஆங்கிலம் கற்க வேண்டும் என்று சொல்வது ஏன் என்று அவர்களுக்கு விளங்கவில்லை.

ஸ்ரீகண்டய்யா, அவர்களுக்கு இதனை மேலும் விளக்கியுரைத்தார். பொதுமக்களின் பேச்சு மொழியும் இலக்கிய மொழி நடையும் ஒன்றாக யில்லாவிடினும் ஓரளவிற்கு நெருங்கியிருக்க வேண்டும். எதுகை மோனைகளுக்காகச் செய்யுளைச் செயற்கையாக்கக் கூடாது. யாப்பி லக்கணம் தெளிவான எளிய கருத்து வெளிப்பாட்டுக்கு ஏற்ப எளிமை யாக்கப்பட வேண்டும். மக்களின் அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளும் கவிதைக்குரிய பொருளாக வேண்டும். மரபுவழிக் கவிஞர்களுக்கு இவருடைய கூற்று கடுந்தாக்குதலாக இருந்தது. இவற்றைக் குறித்து எழுதும்போது அவர் நடை, குத்தலாகவும் மாறு பட்ட கருத்தினருக்கு எரிச்சலூட்டுவதாகவும் இருந்தது.

மரபு, பழமை போற்றிய மொழியறிஞர்கள் தம் கருத்து இனியும் எடுபடாது என்றறிந்தும் எதிர்ப்புத் தெரிவிக்கும் வகையில் கடுமை யாகவும் அளவிறந்தும் வசைமாரி பொழிந்தனர். பல்கலைக்கழகத் தில் பட்டம் பெற்றவரும் பழமை விரும்பியுமான பெரியவர் ஒருமுறை, ஸ்ரீகண்டய்யா அவர்களின் மாணவர் ஒருவர் கன்னடத்தில் வளர வேண்டிய புதுவகைக் கவிதைகளைப் பற்றிப் பேசிய கருத்துகளைக் கேட்டு, கடுஞ்சினமுற்றவராய், 'சட்டிபானை, அகப்பை, துடைப்பக் கட்டையைப் பற்றிப் பாடுவதெல்லாம் கவிதையாகி விடுமா? இப் படிப்பட்டவர்கள் எல்லாம் மேனாட்டுப் போலிநாகரிகத்தின் அடிவரு டிகள்' என்று பழித்துப் பேசினார். பழமை விரும்பிகள் என்ன பேசி னாலும் இளைஞர்களெல்லாம் ஸ்ரீகண்டய்யாவையே ஆதரித்தனர்.

ஸ்ரீகண்டய்யாவின் செல்வாக்கு நாளுக்கு நாள் பெருகி வந்தது. இதற்கு, அவர் கன்னட நாட்டின் ஒருங்கிணைப்புக்கு முழுமூச்சாகப் பாடுபட்டார் என்பது நாடறிந்த செய்தியாக இருந்தது என்பதும், அடிப்படைக் காரணங்களுள் ஒன்றாகும். கன்னடநாட்டின் ஒருங் கிணைப்புக்கு மாறான கருத்துடையவர் எவரும், அந்நாளில், இவரு டைய கன்னட நாட்டு ஒருங்கிணைப்பு அரசியல் தகிடுதத்தமன்று, என அறிந்தனர். கன்னட நாட்டு ஒருங்கிணைப்பு, கன்னட இலக்கி யம் மற்றும் மொழி வளர்ச்சிக்கு ஓரளவு தேவையானது என்னும் உணர்வே இதற்குக் காரணமாகும். அரசியல் நோக்கங்களுக்காகக் கன்னட நாடு பற்பல கூறுகளாகத் துண்டாடப்பட்டு ஐந்தாறு பிரிவி னரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. கன்னட நாட்டின் ஒரு பெரும் பகுதி மைசூர் அரசரின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. சில மாவட்டங்

கள் ஆங்கிலேயரின் நேரடி ஆட்சியின் கீழும், மற்றுஞ்சில பகுதிகள் நிசாம் மன்னரின் ஆட்சியின் கீழும், பிறபகுதிகள் சில இந்திய இள வரசர்களின் பொறுப்பிலும் இருந்தன. நிசாம் மன்னர் தன் ஆட்சிக் குட்பட்ட கன்னட மாவட்டங்களில் உருதுமொழியை ஆட்சிமொழி யாக்கினுர். வடகன்னட மாவட்டங்களில் மராத்திமொழியின் செல் வாக்கு மிகுந்ததால், மைசூர் கன்னடியர்களுக்கு வடகன்னடத் தாரின் கன்னடம் புரியவில்லை. சில வட்டங்களில் கன்னடப் பள்ளிக்கூடங்களே இல்லை. மைசூர் அரசினரும் 1915-ஆம் ஆண்டுவரை சென்னைப் பல்கலைக்கழகத்தின் பாடத் திட்டத்தையே கையாண்டுவந்தனர். மைசூரில் பல்கலைக் கழகம் தோற்றுவிக்கப் பட்டு பதினைந்தாண்டுகளுக்குப் பிறகுதான் கன்னடத்திற்கென தனித்துறை தொடங்கப்பட்டது. இத்தகு சூழலில் கன்னடத்தை ஆட்சி மொழியாக்கவும் கல்வி நிலையங்களில் பயிற்று மொழியாக்கவும் முனைவது நடைபெறக்கூடிய செயலா? இம்முயற்சியில் முனைவார் யார்?

தார்வாரிலிருந்த கருநாடக வித்தியாவர்த்தன சங்கம், பெங்களூர் கன்னட சாகித்திய பரிஷத்து என்னும் இருநிறுவனங்களும் கன்னட வளர்ச்சிக்காகப் பாடுபட முன்வந்தன. இந்திய விடுதலைப் போராட் டம் மாநிலப் பற்றையும் மற்றும் தாய்மொழிப் பற்றையும் வளர்க்கத் தூண்டுகோலாய் அமைந்தது. இது, எதிர்பாராமல் கன்னட வளர்ச்சியை விரைவுபடுத்த வந்த ஒரு நற்பேருகும். அரசியல் கட்சிக்காரர்கள் பொதுமக்களோடு தொடர்பு கொள்ள, மக்களின் பேச்சு மொழியாகிய கன்னடத்தில் எழுதவும் பேசவும் வேண்டிய கட்டாயத்தை யுணர்ந்தனர். அரசியல் சொற்பொழிவுகளில் தாய் மொழியுணர்வை ஊட்டி மக்களிடை புதுக்கிளர்ச்சி யுண்டாக்கினர். அரசியல் மற்றும் பண்பாட்டு எழுச்சிகளை ஒருமுகப்படுத்திக் கன்னட நாட்டின் மறுமலர்ச்சிக்கு வித்தூன்ற வேண்டும். இப்பணிக்கு, கன்னட நாட்டின் எல்லாப்பகுதி மக்களாலும் மதிக்கப்படத்தக்க ஒரு தலைவர் தோன்றவேண்டும் என்று கன்னடத்தவர் எதிர்பார்த் துக்கொண்டிருந்த நேரத்தில், பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல், ஸ்ரீகண்டய்யா அத்தகைய பெருந்தலைவராக மிளிரத் தொடங்கினுர்.

ஸ்ரீகண்டய்யா பலமுனைப் போராட்டம் நடத்த வேண்டியிருந்தது. இவரை, சமஸ்கிருதம் கற்ற பண்டித மணிகள் ஒருபுறம் எதிர்த்தனர். ஆங்கிலங்கற்ற அறிஞரின் பகை மறுபுறம். இந்நிலையில் அரசியல் காரர் சிலர் ஒன்றுகூடி, ஸ்ரீகண்டய்யா அரசியல் பேசலாமா என்று வினுக்கணை தொடுத்தனர். அவர் அரசியல் கட்சிகளில் ஈடுபடா விடினும் கன்னட நாட்டு அரசியலோடு தொடர்பற்றவர் என்று சொல்லமுடியாது. இத்தகைய சிக்கலான சூழலில் ஸ்ரீகண்டய்யா சில நேரங்களில் இரு அணிகளிலும் காணப்பட்டார். இச்சிக்கலை

நன்குணர்ந்து கொண்டால், அவருடைய இயல்புகள் பல்வகைப் பட்டிருப்பதன் காரணத்தைப் புரிந்து கொள்ளலாம். சில நேரங் களில், தான் எதிரிட நேர்ந்த சிக்கல்களில் ஏன் நேர்மாருக நடந்து கொண்டிருக்கிருர் என்பதையும் தெளிவுபடுத்திக்கொள்ள முடியும்.

அவர் சமஸ்கிருதத்தை விரும்பினுர், ஆனுல் சமஸ்கிருதம் கன்னடத்தின் வளர்ச்சியைத் தடுப்பதை வெறுத்தார். சமஸ்கிருதத் தாக்குதலைத் தடுத்து நிறுத்தவும், கன்னடத்தைத் தாழ்வுறும் நிலையி லிருந்து காப்பாற்றவும் விரும்பினுர். பழமையை மதித்தார். அதே நேரத்தில் பழமையிலுள்ள மூடத்தனங்களுக்கு எதிராகப் போர்க் கொடியும் உயர்த்திஞர். ஆங்கில மொழியின் மீது தனியாக ஆர்வம் கொண்டிருந்தார். இருப்பினும், கன்னடத்துக்கே எப்பொழுதும் முதலிடம் தந்தார். அவருடைய இத்தகைய இயல்புகள் முன்பே சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. எனினும், அவருக்கு ஆங்கிலத்தின் மீதும் இங்கிலாந்து நாட்டின்மீதும் இருந்த தணியாத காதலைப் பற்றி இங்குக் குறிப்பிட வேண்டியது இன்றியமையாதது.

ஆங்கில இலக்கியத்தின் மீது அவர் கொண்டிருந்த ஆர்வத் துக்கு எல்லையே இல்லை. அவர் இந்தியாவை விட இங்கிலாந்தை அதிகமாகப் போற்றிஞரா? இங்கிலாந்துடன் இந்தியா கொண்டிருந்த தொடர்பால் இந்தியாவுக்கு அளப்பரிய நன்மைகள் விளைந்திருப்ப தாக நம்பிஞரா ? நாட்டுப் பற்ருளர் பலரும் இராசாராம் மோகன்ராய் காலத்திலிருந்து இன்றுவரை இரண்டாம் கருத்தையே, பலரும், நம்பி வந்தனர்.

ஸ்ரீகண்டய்யா இந்தியாவின் விடுதலைப் போராட்டத்தில் பெரிதும் ஈடுபடாமல் ஒதுங்கியிருந்தார் என்பது உண்மையே. அவர் ஓர் அரசு அலுவலராய் இருந்ததால், வெள்ளையர்க்கு எதிரான அரசியல் கட்சிப் போராட்டங்களில் கலந்து கொள்ள இயலாமற்போயிற்று. அவர் அரசியலில் நேரடியாக ஈடுபட்டிருந்தாலும் இடைவினையாளர் (மிதவாதி) வரிசையில் இருந்திருப்பாரேயல்லாமல் கடுவினையாளராக (தீவிரவாதி) இருந்திருக்க மாட்டாது.

அவர் தன்னடக்கத்தோடு தன்னை முழுமையாகக் கன்னட நாட்டு நலங்களை வளர்ப்பதிலேயே ஈடுபடுத்திக் கொண்டார். " தில்லி (தலைநகரம்) நெடுந்தொலைவிலிருக்கிறது. அள்ளி (சிற்றூர்) எனக் குப் போதுமானது " என்று ஒருமுறை கூறிஞர்.

இங்கிலாந்தின் பெயரைக் கேட்கவே கசப்பாக இருந்த இந்திய விடுதலைப் போராட்ட காலத்தில், ஸ்ரீகண்டய்யா இங்கிலாந்து நாட்டின் மீது வெளிப்படையாகப் பற்றுக் கொண்டிருக்க வேண்டிய தில்லை யென்பது, ஒருகால், ஒப்புக்கொள்ளத்தக்கதாயிருக்கலாம். இதனைக் குறித்து அவர் சொன்னதாக வழங்கும் கதையும்

ஒன்றுண்டு. "நான் இறக்கும் போது என் இதயத்தின் மீது இங்கிலாந்து என்னும் சொல் (சேஃசுபியர் என்று சிலர் கூறுவர்) எழுதப்பட்டிருப்பதைப் பார்க்கலாம்" என்று ஒருமுறை கூறினாராம். இது உண்மையானதா கட்டுக்கதையா என்பதை நானறியேன். எனினும், அவர் சேஃசுபியரையும் வேர்டுசுவர்த்தையும் பெரிதும் மதித்தார். அப்பெரும் புலவர்கள் பிறந்த மண்ணாகிய இங்கிலாந்தையும் அதன் தொடர்பாக மதித்தார் என்பதே உண்மையாக இருக்க முடியும். அவருக்கு இங்கிலாந்தின் மீதிருந்த மதிப்பு, இந்தியாவின் மீதும் கருநாடகத்தின் மீதும் அவருக்கு இயல்பாகவே சுரந்திருந்த பற்றைச் சிறிதளவும் குலைக்கவுமில்லை; குறைக்கவுமில்லை. அவர் இதயத்தில் ஏதேனும் எழுதப்பட்டிருந்தது என்று கூறினால், அது கன்னடம் என்னும் சொல்லாக இருக்குமேயன்றி வேறொன்றாக இருக்க முடியாது.

அவர் அரசியலிலிருந்து ஒதுங்கி வாழ்ந்தவரல்லர் என்று முன்பே குறிப்பிட்டிருக்கிறேன். அவருடைய அரசியலார்வம் ஒருங்கிணைந்த கருநாடகத்தைக் காணத் துடித்தது. இது கைகூட வேண்டுமானால் இந்தியா வெள்ளையரிடமிருந்து விடுதலை பெற்றேயாக வேண்டும். இப்பெருஞ்சிக்கல் விடுவிக்கப்படுவது ஒன்றே நம் எண்ணத்தின் ஈடேற்றம் என்பதை நன்கு உணர்ந்திருந்தார்.

வெள்ளையர் கன்னட நாட்டுப் பெரும் பகுதிகளை எளிமையாக மைசூர் அரசருக்குத் தந்துவிடமாட்டார்கள். அப்படி நிகழ்ந்தாலும், நிசாம் போன்றவரிடமுள்ள கன்னடப் பகுதிகளைப் பெறமுடியாது. இப்பெரிய சிக்கலை, காந்தியடிகளும், இந்தியப் பேராயக் கட்சியாளரான தேசீய காங்கிரசுமே தீர்க்கும் பொறுப்பை ஏற்றிருந்தனர். எனினும், காந்தியடிகளாலும் அவருடைய கட்சியினராலும் இது கை கூடும் வரை ஸ்ரீகண்டய்யா காத்திருக்க விரும்பவில்லை. ஒருங்கிணைந்த கருநாடகம் வேண்டும் என்று நாம் குரலெழுப்பினாலொழிய இவ்வெண்ணம் நிறைவேறாது. மக்களிடை விழிப்புணர்ச்சியூட்டிக் கிளர்ந்தெழச் செய்ய வேண்டும். இது அரசியல்காரர்களின் வேலை. ஆயினும் அன்றையச் சூழலில் இப்பணியில் ஸ்ரீகண்டய்யாவே ஈடுபட வேண்டியிருந்தது. ஒருங்கிணைந்த கருநாடகம் அமைய வேண்டியதன் இன்றியமையாமையை வலியுறுத்தி வெளிப்படையாகப் பேசத் தொடங்கினார். ஸ்ரீகண்டய்யா யாருக்கும் தீங்கு நினைக்காத இலக்கிய அறிஞர் என்றும், அரசியல் நோக்கத்தோடு அரசியல்காரர்களைப்போல் குழப்பங்களையும் கிளர்ச்சிகளையும் தூண்டிவிடுபவரல்லரென்றும், அரசு மேலதிகாரிகள் பலரும் நினைத்தனர். ஆதலால், வெள்ளைக்கார அதிகாரிகள் இவருடைய நடவடிக்கைகளை ஐயக்கண் கொண்டு நோக்கவில்லை.

கன்னட மொழி வளர்ச்சிக்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் பாடுபட அணி திரட்டிக் கொடியுயர்த்தினார். கருநாடகத்தின் பண்பாட்டு ஒற்றுமையையும் ஒட்டுமொத்தமான வளர்ச்சியையும் குறிக் கோளாகக்கொண்ட கன்னட பரிஷத்தினருடன் ஒத்துழைக்க வாரீர் என்பதே அவர் விடுத்த வேண்டுகோள். இவருடைய பேச்சுகள் அரசியல்வழி ஒற்றுமையையும் வலியுறுத்தாமலில்லை. மைசூர் கன்னடியரைவிட, வெள்ளையரின் நேரடி ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதிகளில் வாழ்ந்த கன்னட மக்கள் இத்தகைய ஒற்றுமையைப் பெரிதும் விரும்பினர்; வெளிப்படத் தம் இசைவையும் தெரிவித் தனர். இதிலும் ஒரு சிறு சிக்கல் இருந்தது. அவர்கள் மைசூர் மன்னராட்சியின் கீழ்வர விரும்பவில்லை. அவர்கள், நாட்டு விடுதலை யென்பது குடியரசாக விளங்க வேண்டும் என்றனர். இங்குத்தான் ஸ்ரீகண்டய்யா அவர்கள், உணர்வு மழுங்கி, அவர்கள் விரும்பாத கருத்துகளை வெளியிடுகிறார் என்று அஞ்ச வேண்டி யிருந்தது. முற்றிலும் பழமையான கொண்டான்மார் (Feudal system) ஆட்சியில் அவருக்கு ஈடுபாடு இருந்தது. இது அவருடைய மாணவர்களுக்கு அறவே பிடிக்கவில்லை. ஸ்ரீகண்டய்யாவின் உள்ளார்ந்த நோக்கம் ஒருங்கிணைந்த கருநாடகம் மைசூர் மன்னரின் வெண்கொற்றக்குடை நிழலில் பாதுகாப்புப் பெற வேண்டும் என்பதாகும்.

தம் வாழ்நாளிறுதிக்கு முந்திய சில மாதங்களில் ஸ்ரீகண்டய்யா அவர்கள் நிலையில் சில மாறுதல்கள் தெரிந்ததாக, டாக்டர். ஆர். எஸ். முகளி கூறினார். ஸ்ரீகண்டய்யா திடுமென இறப்பதற்கு முன் டாக்டர் முகளியோடு நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தார். 'கரு நாடக மாநிலம் மைசூர் அரசரின் ஆளுமையின் கீழ் வருவதாயின் அரசியல் கட்சிக்காரர்கள் முழுமனதுடன் ஒத்துழைக்க மாட்டார் களே என்னும் ஏக்கம் என்னை ஆட்கொண்டு விட்டது' என்று ஸ்ரீகண்டய்யா முகளியிடம் கூறினாராம்.

ஸ்ரீகண்டய்யாவின் உயிர் பிரிவதற்குச் சற்று முன்பு கூட, மைசூர் மன்னரின் ஆளுகைக்கு உட்பட்டாயினும் ஒருங்கிணைந்த கருநாடக மாநிலத்தைக் காணவேண்டும் என்னும் ஆசையே அவருக்கு மேலோங்கியிருந்தது. ஆயின், ஒருங்கிணைந்த கருநாடக மாநிலம் என்பது எவ்வகையிலமைவதாயினும் நிறைவேற முடியாத பகற்கனவாகவே இருந்தது. ஆதலால், பொதுமக்கள் ஸ்ரீகண்டய் யாவின், மன்னர் சார்புள்ள கருநாடக மாநிலக் கொள்கையை அவருடைய சொந்த விருப்பத்தின் வெளியீடாகவே கருதினர். எனினும், இவருடைய தூண்டலின் விளைவாகக் கன்னட சாகித்திய பரிஷத்தினரும் கன்னட நாட்டு அறிஞர்களும் மாணவர்களும் ஒருங் கிணைந்து அவரவர் கருத்துகளை ஒப்பிட்டறிய வாய்ப்பு உண்டாக்கித்

தந்ததற்காக அனைவரும் இவருக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளனர். இதுவே அவருடைய முயற்சிக்குக் கிடைத்த முதல் வெற்றி எனலாம்.

ஸ்ரீகண்டய்யா சிறந்த ஆசிரியராகவும் விளங்கினர் என்பதை இங்கு நான் இறுதியாக எடுத்துக் கூறுவது பொருந்தும். வகுப் பறை மேடையில், அவர் காணப்பட்ட எடுப்பான தோற்றத்தை மனக்கண்ணில் நிலை நிறுத்தி மாணவர்கள் அவரை நினைவு கூர்கின் றனர்; அன்புசெலுத்துகின்றனர். அவர் ஆசிரியரான முதற்பத் தாண்டு அளவில், மாணவர்களின் கண்ணுக்கு, புனிமலை முகட்டில் தனிமைத் துறவு நிலையிலிருந்து விழித்தெழுந்து, மண்ணுலக மக்களைக் காண வேண்டிய போது மட்டும், படியிறங்கி வந்த முழு துணரும் ஞானிபோல் காணப்பட்டார். 1920-ஆம் ஆண்டள விலும் அதற்குப் பின்னும், அவர் மதிப்பாண்மை கன்னடப் பேராசிரியராக வகுப்புக்கு வந்து ஆற்றிய விரிவுரைகளைக் கேட்கும் பேறுபெற்ற மாணவர்கள் அவருடைய விரிவுரைகளில் உள்ளத் தைப் பறிகொடுத்தனர். அவருடைய வெளியூர்ச் சொற் பொழிவு களைக் கேட்ட என்னையொத்த மாணவர்களும் அவ்வாறே அவருடைய சொற்பொழிவுகளால் ஈர்க்கப்பட்டோம். அவர் வகுப் பறையில் விரிவுரையாற்றும் போது கேட்போரை விடத் தானே, முதலில், தான் கூறும் கருத்தில் ஒன்றிப் போய் விடுவார். பாடம் நடத்துவது என்பது அவரைப் பொறுத்த அளவில் புரிந்து கொள்ளத்தக்க பாடத்தைக் கற்பிப்பது என்று பொருள்படாது.

பாடம் சொல்லித்தர முன்னால் வந்து நிற்கும்போது, கேட்கும் மாணவர்களின் எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் உயர்ந்த கருத்தாழங்களை அளவிட்டறிவதற்காக, எண்ண உலகில் சிறகு விரித்துப் பறந்து செல்லவிட்டு விடுவார். அழகான கருத்தோ அவருடைய எண்ணத்தைக் கிளரும் சொற்றொடரோ கிடைத்து விட்டால் போதும்; எண்ண உலகில் உயர உயரப் பறக்க ஆரம் பித்து விடுவார். அவர் விளக்கிக் கூறும் கருத்துகளின் வண்ண ஓவியக் கோலங்கள், மாணவர்களின் மனக் கண்ணில் என்றும் நிலைத்த இன்ப மூட்டிக் கொண்டிருக்கும். இந்த இன்பம் வெறுமனே பாடம் படிக்கும் மாணவர்களின் மனத்துக்குச் சிறிதும் தட்டுப் படாதவை.

அவர் விரித்துரைக்கும் அரிய செய்திகளும் கருத்துகளும், சில வேளைகளில், பாடத்திற்குத் தொடர்பில்லாமலும் மனச் சோர்வளிப்ப தாகவும் இருக்கிறது என்று சிலர் குறை கூறலாம். ஆயின், அவர் தந்த விளக்கங்கள், எண்ணத்தின் வண்ணக் கோலங்கள் நம் பிற்கால வாழ்க்கைக்கு எத்துணைப் பயன் தருபவை, எந்த அளவுக்கு

மனத்தை விரிவடையச் செய்பவை என்று எண்ணிப் பார்த்தால் அவருடைய விரிவுரையின் அருமை புரியும்.

ஆங்கிலச் செய்யுட்கள் அவருடைய உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுந் தன்மையவாய் விளங்கின. The spirit that dwells in the light of setting suns", The young lambs bound as to the tabor's sound" என்னும் வரிகள் ஏதோ பொருளைச் சுட்டும் சொற்றொடர்கள் அல்ல. அவை அவருக்குப் பண்ணும் இசையுமாகும். அவருக்கு அதன் உட்கருத்துகள் மெய்ப்பொருள் விளக்கங்களாகக் காணப்படும். செய்யுள் நயம் நுகரும் போது தன்னையறியாமல் சிலவேளைகளில் கண்ணை மூடிக்கொள்வார். அதன் உட்பொருள் நயத்தைச் சொல்லால் விரிக்கு முன் அவரே அதன் இனிமையில் மயங்கி உள்ளுக்குள் மகிழ்கிறார் என்று நாங்கள் எண்ணிக்கொள்வோம். அவர் முதுகலை (எம். ஏ.) வகுப்பில் மாத்யூ ஆர்னால்டின் கவிதைகளை நடத்திய நாளை இன்னும் நான் நினைவு கூர்கிறேன்.

புலவர் தாந்தேயின், "In His will is our peace" என்னும் பொன்மொழியை உணர்ந்து உணர்ந்து உள்ளத்தில் பதிய விளக்கியுரைப்பார். இந்த வரியைக் கூறியவுடன் பேசாமல் நின்று விடுவார். அந்த அமைதியில் எத்துணையோ ஆழ்ந்த உண்மைகள் எங்களுக்குப் புலப்படும். அமைதியாக நிற்கும்போது, அவர் கண்களை இமைகள் மூடிக்கொள்ளும். மீண்டும் அதே வரியை "In His will is our peace" அவருடைய நா மென்மையாக ஒலிக்கும். "In His will is our peace" என்னும் தாந்தேயின் பாடல் வரியை, அவருடைய நொந்த உள்ளத்திற்கு ஏற்ற மருந்தாகப் பயன்படுத்திக் கொண்டார்.

மற்றொரு நாள் இளங்கலை (பி. ஏ.) வகுப்பில் ஆங்கிலக் கவிஞர் வேர்டுசுவர்த்தின் 'The still sad music of humanity' என்னும் செய்யுள் நடத்த வேண்டியிருந்தது. பாடமும் நடந்து கொண்டிருந்தது. பாடவேளை முடிந்து மணியடித்ததும் கூட எங்களுக்குக் காது கேட்கவில்லை. அவருடைய விரிவுரையில் அப்படி ஒன்றிப் போயிருந்தோம். பேராசிரியர் அக்கவிதையை நடத்தி முடித்து ஒரிரு நிமிடம் அமைதியாக நின்றார். வகுப்பு முடிந்ததும் வழக்கமாக ஆரவார அமளி ஒன்றுமேயில்லாமல் வகுப்பில் பேரமைதி நிலவியது.

பாடம் முடிந்தபின்னும் கூட வகுப்பு அவருடைய விரிவுரை நயத்தில் மூழ்கியிருந்த போது, பேராசிரியரும் அந்தக் கவிதை நயத்தில் மயங்கித் தெளியாமலிருந்தார்.

பல ஆண்டுகளுக்குப் பின் அவரை நேரிற் கண்டு உரையாட நேர்ந்த போது அன்றொருநாள் வகுப்பில் நிலவிய பேரமைதியை நினைவுறுத்தினேன்.

அதைக் கேட்டு அவர், ஆம், அப்படி ஓரிருமுறை நிகழ்ந்திருப்பது எனக்கும் நினைவிருக்கிறது. நினைவில் நிலைத்துவிட்ட அந்த அமைதி யான நேரம் ஒவ்வொன்றுக்கும் நன்றி செலுத்தியாக வேண்டும் என்றார்.

பகுதி மூன்று

# 3. பணிகள்

### ஆங்கிலப் பாடல்கள்

ஸ்ரீகண்டய்யா ஆங்கிலப் பாடல்களைக் கன்னடத்தில் மொழி பெயர்த்த செய்கை, ஆங்கில கிரேக்கப் பேரிலக்கியங்களைக் கன்னட மாக்குவதற்கு முன்னேற்பாடான வெள்ளோட்டமாக இருந்தது எனலாம். சென்னைப் பல்கலைக்கழகத்தில் மாணவராக இருந்த பொழுதே இவ்வாறு மொழி பெயர்க்கும் பணியைத் தொடங்கினார்.

வித்திய அத்தியயினி என்னும் மாத இதழில் 1919-ஆம் ஆண்டு 'ஆங்கிலப் பாடல்கள்' என்னுந் தலைப்பில் மூன்று ஆங்கிலப் பாடல் களின் கன்னட ஆக்கம் முதன்முதல் வெளிவந்தது. இக்கன்னட மொழிபெயர்ப்பு அதற்கும் பல ஆண்டுக்கு முன்பே செய்யப்பட்டது என்பது அவர் கூற்றால் தெரிகிறது. பன்னிரண்டு பாடல்கள் 1921-ஆம் ஆண்டிலும் இருபத்துநான்கு பாடல்கள் 1924-ஆம் ஆண்டிலும் வெளிவந்தன. இப்பொழுதுள்ள நூல் 'ஆங்கிலப் பாடல்கள்' என்னுந் தலைப்பில் எல்லாப் பாடல்களும் தொகுக்கப் பட்ட ஒரே நூலாக 1926-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இந்நூலை வெளியிட்ட பெருமை பெங்களூர் சென்ட்ரல் கல்லூரி (Central College) கன்னட மன்றத்தார்க்குரியதாகும். 1921-ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட நூல், பச்சைத் தாளட்டையிடப்பட்ட மிகச்சிறிய முதற்றொகுதியாக வெளிவந்தபோது, என்னைப்போன்ற கல்லூரி மாணவர்களும் பள்ளி மாணவர்களும் அதனை விரும்பி வாங்கிப் படித்ததுண்டு.

1920-ஆம் ஆண்டு அளவில், கற்றுவல்ல கன்னட வாசகர் களுக்குப் புதுமையான இரு நுகர்ச்சிகள் காத்துக் கிடந்தன. ஒன்று, ஆங்கிலக் கவிதைச் செல்வத்தைக் கன்னட மொழியில் சுவை குன்ருமல் படிப்பது. மற்ருென்று, மாஸ்தி வேங்கடேச ஐயங்காரின் சிறுகதைகளையும் புதினங்களையும் படிப்பது. கன்னடத்தில் புது மெருகுடன் தோன்றி வளர்ந்த கவிதை மற்றும் உரைநடைப் படைப் பிலக்கியங்கள் வாசகர்களுக்குக் கிளர்ச்சியூட்டின.

என்னுடைய மூத்த நண்பர் ஒருவர், ஏதோ வெறுப்பால் விளைந்த தாழ்வுணர்வால் உந்தப்பட்டு, கன்னட காப்பியங் களையும் பழைய இலக்கியங்களையும் 'மன்னனைப் போற்றும் புகழ் மொழி இலக்கியங்கள்' 'Listen O King literature' என்று இழிவுப் பட்டம் கட்டி அழைத்தது இன்னும் எனக்கு நினைவிருக்கிறது. கன்னட இலக்கியங்கள் காலப்போக்கில் தரங் குறைந்து கொண்டே போகும் வண்ணனைக் காப்பியப் பாங்குடையது என்றும், அரசர் களின் செவிகளுக்காக எழுதப்பட்ட அணிகலப் படைப்புகள் என்றும் நிலைத்த பயன்பாடுடையனவல்ல என்றும், அந்நண்பர் கருதினுர். கன்னட இலக்கியத்தைப் பற்றிய அவருடைய ஒட்டுமொத்தமான கணிப்பு முழுமையாக ஏற்கத்தக்கதன்று. அலை ஓய்ந்த கடலில் அசைவற்று நின்ற கப்பலைப் போல், ஒரு கால கட்டத்தில், கன்னட இலக்கிய வளர்ச்சியில் தேக்கம் ஏற்பட்டிருந்தது என்பது உண்மையே.

ஆங்கிலப் பாடல்கள் நூல்களாக வெளிவந்ததும்,

The fair breeze blew, the foam flew
The furrow followed free.

என்னுமாறு போல, கன்னட இலக்கியம் புத்துயிர் பெறத் தொடங்கி விட்டது. கன்னடத்தில், மறுமலர்ச்சி நோக்கிய இலக்கிய வளர்ச்சியின் புதுப் பயணத்துக்கு ஸ்ரீகண்டய்யாதான் முதன்முதல் வழிகோலினுர் என்று சொல்வதற்கில்லை. பள்ளிகளிலும் கல்லூரி களிலும் மேனுட்டுக் கல்வி முறையையொட்டி ஆங்கிலமே முதற் பாடமொழியாக இருந்ததால், இவருக்கு முன்பே, ஆங்கில இலக்கியங் களைக் கன்னடத்தில் ஆக்கும் பணி தொடங்கப்பட்டிருந்தது. ஸ்ரீகண்டய்யா பிறப்பதற்கு முன்பே சேக்ஸ்பியரின் நாடகங்கள் கன்னடத்தில் வெளியிடப்பட்டிருந்தன. 1903-ஆம் ஆண்டு அவர் இளங்கலை (பி. ஏ.,) பட்டம் பெறுவதற்குமுன் ரோமியோ ஜூலியட், ஒதெல்லோ, கிங் லியர், மாக்பெத்து ஆகிய நாடகங்கள் கன்னடத்தில் மொழி பெயர்க்கப்பட்டு மேடைகளில் பெருமளவில் நடிக்கப்பட்டன. இவை மக்களிடை பெயர் பெற்ற நாடகங்களாகவும் விளங்கின. இவற்றின் ஈர்ப்பால் மறுமலர்ச்சி இலக்கியப் படைப்பாளர்கள் கவரப்பட்டனர்.

கன்னடத்தில் கவிதை இயற்றுவதிலும் உரைநடை எழுது வதிலும் ஒப்புயர்வற்று விளங்கிய எஸ். ஜி. நரசிம்மாச்சாரி என்பவர் இந்நூற்ருண்டின் முதற்பத்தாண்டளவில், திருமதி எமன்சின் 'The better land' வேர்ட்ஸ் வொர்த்தின் 'To the coukoo' ஆகிய வற்றைக் கன்னடத்தில் கவிதை வடிவில் மொழிபெயர்த்தார். இவை பாடநூல்களிலும் சேர்க்கப் பட்டிருந்தன. இவற்றைச் ஸ்ரீகண்டய்யாவும் படித்திருந்தார்.

ஆங்கிலக் கவிதைகளை அழகுறக் கன்னடத்தில் மொழியாக்கம் செய்யும் திறன் வாய்ந்த மற்ருெரு முன்ஞேடிக் கன்னட எழுத்தாளர் எச். நாராயணராவ் ஆவார். அவருடைய மொழிபெயர்ப்புகள் வெறுங் கண்துடைப்பாக அமைந்தவையன்று. பழமையான யாப்பு, பொருள் வகைமை ஆகியவற்றைக் கைவிட்டு புதுகன்னட இலக்கியப் படைப்பை எவ்வகையில் மேற்கொள்ள வேண்டும் என்று அவர் தீர ஆய்வு செய்த பின்னரே மொழியாக்கம் செய்யத் தொடங்கிஞர். ஆங்கிலக் கவிதையின் சாரம் (The Best in English poetry) என்னும் நூலின் அணிந்துரையில், 'எனக்குச்சரி எனத் தோன்றிய சில நீக்கங்களையும் திருத்தங்களையும் ஆங்காங்கு இதில் செய்திருக்கிறேன். நம் கன்னட இலக்கிய முன்ஞேரும் காலப் போக்கில் யாப்பு அமைப்புகளில் எத்துணையோ மாற்றங்களைச் செய் திருக்கின்றனர். இப்பொழுது எதிலும் எளிமை விரும்புவோர் இலக்கியத்துறையிலும் புதுநெறிகளை ஏன் உண்டாக்கக் கூடாது என எழுதியுள்ளார். ஆங்கில இலக்கியங்களைப் படித்ததஞல் உண்டாகிய புத்துணர்வின் விளைவாக, திரு. நாராயணராவ் தெளி வான, உள்ளம் ஒன்றிய முயற்சியோடு கன்னட இலக்கியத்திற்கு நல்ல புதுப்பாதை வகுத்துத்தந்தார். ஸ்ரீகண்டய்யாவும் நாராயண ராவும் ஒருவர் பணியை மற்றவர் அறியாதிருந்த நிலை எதிர்பாராதது.

நாராயணராவைக் குறிப்பிடும் போது பஞ்செ மங்கேசராவ். எம். கோவிந்த பை ஆகியோரைக் குறிப்பிடுவது இன்றியமையாத தாகும். 1911-ஆம் ஆண்டில் கன்னடச் செய்யுளில் எதுகை இருக்க வேண்டிய தேவையில்லை என்று துணிந்து தீர்மானம் கொண்டுவந்த பெருமைக்குரியவர் கோவிந்தபை. கன்னட இலக்கியத்தின் பழைய போக்குகளின் மீது பொதுவாகவே அந்நாளில் வெறுப்பு வளர்ந் திருந்தது. புத்தம் புதிய இலக்கிய வகைமைகளுக்கு வரவேற் பிருந்தது. 'ஆங்கிலப் பாடல்கள்' என்னும் நூல் இந்த வகையில் முன்னணியில் நின்றது. இந் நூலின் செல்வாக்கு ஆங்கிலத்தில் 'Lyrical Ballad' என்னும் நூல் பெற்றிருந்த பெருஞ்செல்வாக்குக்கு ஒப்பானதாகக் கருதப்பட்டது. இந்தப் புது இயக்கம் கன்னடக் கவிதையின் மறுமலர்ச்சி இயக்கம் என்று அழைக்கப்பட்டது. ஆங்கில இலக்கிய மாணவர் இதனைப் படைப்பிலக்கியப் புரட்சி

என்று குறிப்பிடுவர். ஆங்கிலப் பாடல்கள் என்னும் நூலில் அறுபது பாடல்கள் உள்ளன. ஷெல்லியின் கவிதைகள் ஒன்பது; பர்ன்சின் கவிதைகள் ஏழு, வேர்டுசுவொர்ந்தின் கவிதைகள் ஐந்து, பிரவுனிங், டென்னிசன் ஸ்கர்ட் ஆகியோரின் கவிதைகள் மும் மூன்று, ஷேக்ஸ்பியர், சௌதெ, பைரன் ஆகியோரின் கவிதைகள் இவ்விரண்டு, பிற கவிஞர்களின் கவிதைகளிலிருந்து எஞ்சியவை இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

ஆங்கில இலக்கியம் படித்த எந்த மாணவனும் இந்நூலிலுள்ள பாடல் தலைப்புகளைத் திடீரெனப் பார்த்ததும் பெருவியப்படைவான். ஆங்கில இலக்கியப் பரப்பிலிருந்து குறைவான பாடல்களுக்கு மட்டும் கன்னட வடிவம் தந்த ஸ்ரீகண்டய்யா, அவருக்கு மிகப் பிடித்திருந்த வேர்டுசுவொர்த்தின் ' Lucy Poems ' என்பதை ஏன் மொழி பெயர்க்கவில்லை. புகழ் பெற்ற பாடல்களான, The Solitary Reaper, La Belle Dame Sam Merci, The west wind, Ozymandias of Egypt போன்றவற்றை யெல்லாம் ஒதுக்கிவிட்டு, The Loss of Royal George, Ye Mariners of England, Rule Britanniya, My England போன்றவற்றை மட்டும் ஏன் தெரிந்தெடுத்தார் என்று வினவுவாரும் உளர்.

இதற்கு இரண்டு மூன்று விடைகள் உள. அவர் நூலின் முன்னுரையில் தந்திருப்பதே—ஒருமுழுமையானதாக இல்லாவிடினும்—ஏற்ற விளக்கமாகும். " இங்குத் தரப்பட்டுள்ள பாடல்கள் ஆங்கில இலக்கியத்தில் சிறந்தவை என்பதற்காகத் தெரிந்தெடுக்கப் படவில்லை. புகழ்ப்பெற்ற எல்லாக் கவிஞர்களின் கவிதையும் இடம் பெற வேண்டும் என்பதற்காகவும் அன்று. நான் ஆங்கில இலக்கியம் படித்தபோது சில பாடல்கள் எனக்குப் பிடித்தவையாயிருந்தன. அவை என் திறமைக்கேற்ப எளிமையாகக் கன்னடத்தில் மொழி பெயர்க்கத்தக்கனவாகவும் இருந்தன. அத்தகையனவே இங்குச் சேர்க்கப்பட்டுள்ளன. " ஆங்கிலக் கவிஞர்கள் அன்பின் வெளிப்பாட்டை எத்துணை இயற்கையாகவும் பொருத்தமாகவும் உள்ளத்தைத் தொடுமாறும் புலப்படுத்தியுள்ளனர் என்பதை எடுத்துக் காட்ட விரும்பினேன். இத்தகைய பாடல்கள். நான் மொழிபெயர்த்தவற்றை விட ஆங்கிலத்தில் எண்ணிறந்தவை உள்ளன. ' England My England ' என்னும் பாடலின் மேல் அவர் கொண்டிருந்த காதல் அவர் இங்கிலாந்தின் மீது வெளிப்படையாகக் கொண்டிருந்த பெரும்பற்றைக் காட்டுகிறது. என் திறமைக்கேற்ப என்னும் சொற்றொடரில் காணப்படும் அவருடைய தன்னடக்கம், குறிப்பிட்ட சில பாடல்களை மட்டும் கன்னடத்தில் மொழி பெயர்க்க ஏன் தெரிந்தெடுத்தார் என்பதற்கு விடை பகர்கிறது.

இப்பாடல் தொகுதியை வெளியிட்ட சில ஆண்டுகளுக்குப் பிறகும் பிறவற்றைக் கன்னடத்தில் மொழிபெயர்ப்பது அவருடைய திறமைக்கு அப்பாற் பட்டதாக அவர் கருதியிருப்பாரா என்று நான் எண்ணிப் பார்த்ததுண்டு. உண்மையென்னவெனில், 1930-ஆம் ஆண்டளவில் அவருக்கு எழுதுவதற்கான ஓய்வு மட்டும் கிடைத்திருப்பின், மற்ற ஆங்கிலக் கவிதைகள் மட்டுமல்லாமல் ஷேக்ஸ்பியர், எஸ்கிலஸ் போன்றோரின் நாடகங்கள் அனைத்தையும் கன்னடமாக்கியிருப்பார். அவருக்கு எழுதுவதற்குரிய நேரம் கிடைக்காதது காலத்தின் குறை எனலாம்.

அவருடைய கன்னட மொழிபெயர்ப்புகள் அனைத்தும் உயர்தரமானவை என்று சொல்ல முடியாது. மொழிபெயர்ப்புக் கலைக்கு முடிசூட்டினாற்போல் சில விளங்குகின்றன. மேலுஞ்சில மொழிபெயர்ப்புகள், **"மொழிபெயர்ப்பு முயற்சியில் கவிதை தன்பொலிவை இழந்து விடுகிறது"** என்னும் பொன் மொழியைப் பொய்யாக்கும் அறைகூவலாக அமைந்துள்ளன. இதனை இன்னும் சிறப்பாகக் கூற வேண்டுமாயின், 'மொழி பெயர்ப்பு முயற்சியில் கவிதை மேலும் பொலிவு பெறுகிறது' என்று இவருடைய மொழிபெயர்ப்புகளை வைத்துக் கொண்டு உறுதிப்படுத்தலாம்.

மொழிபெயர்ப்பில் அவருடைய முதன் முயற்சியான வேர்டு சுவொர்த்தின் 'Written in march' பழைய யாப்பில் எழுதப்பட்டதாயினும், ஆங்கில மூலத்தினின்றும் சிறிது வேறுபடுவதாயினும், பொங்கியெழும் உள்ளுணர்வாலும் பொலிந்து இயலும் சொல்லழகாலும் கற்பாரை ஈர்க்கும் ஆற்றல் பெற்றிருக்கிறது.

நியூமேன் என்பவரின் 'Lead kindly Light' ஹூடு என்பவரின் 'The Bridge of Sighs' ஆகிய கவிதைகளுக்கு இவர் செய்த கன்னட ஆக்கம் கன்னட நாட்டில் இவருக்குப் பெரும் புகழைத் தேடித்தந்துள்ளது. இக்கவிதைகளின் கன்னட ஆக்கம் ஆங்கில மூலத்தைவிடச் சொல்லழகிலும் ஓசையழகிலும், உள்ளத்தைத் தொடும் உணர்ச்சி வெளிப்பாடுகளிலும், அவலச் சுவையின் கொடுமுடியைத் தொட்டுக் காட்டுவதிலும் மிகவும் மேலோங்கி நிற்கின்றன.

வேர்டு சுவொர்த்தின் 'The pet Lamb' 'The Seven Sisters' லிண்ட்ஸே' அம்மையாரின் 'Auld Robin Gray' கோல்ரிட்ஜின் 'Love' ஆகியவை, இவருடைய மேலுஞ்சில கன்னட வெற்றிப் படைப்புகளாகும். சிறிது நோக்கில் வேறுபட்டிருப்பினும், குறிப்பிட்டுக் கூறத்தக்க சிறப்புடைய மற்றொன்று ஸ்காட்டின் 'Gathering song' என்பதாகும்.

'The Seven Sisters' 'Love' என்பவற்ருேடு ஸ்காட்டின் 'Proud Maisie in the wood' *என்பதும் எனக்கு மிகவும் பிடித்த* மொழிபெயர்ப்பு என்று குறிப்பிட்டுக் கூற விரும்புகிறேன். இவை ஆங்கில மூலத்தின் செறிவும் நயமும் குன்ருமல் அமைந்திருப்பதோடு முழுக்க முழுக்க நம் மண்ணின் மணமும் விரவப் பெற்றுள்ளது. ஆனுல், ஷெல்லியின் பாடல்களை மொழி பெயர்த்திருக்கும் வகை அவ்வளவு நிறைவுதரவில்லை.

பர்னின் பாடல்களுள் ஓரிரண்டு நன்கு மொழி பெயர்க்கப் பட்டுள்ளன. பெரும்பாலான பாடல்களின் மொழிபெயர்ப்பு வெற்றி நடை போடும் நிலையில், ஒருசில குறைபாடுடையனவாயிருப்பினும் அவற்றைப் பொருட்படுத்துவதில்லை. ஸ்ரீகண்டய்யாவுக்குத் தன் மொழி பெயர்ப்புகளில் எவையெவை நன்ருக அமையவில்லை என்று தெரியும். இவை கன்னடப் புலவர்களுக்குப் பாடமாக அமையட்டும் என ஒரு தொடக்க ஆய்வு முயற்சியாகவே இவற்றைச் செய்தார் எனலாம்.

'ஆங்கிலப் பாடல்கள்' என்னும் தொகுப்புநூல், அதன் உள் ளார்ந்த தகுதிகளுக்காகவும் குறிப்பாக அதன் வரலாற்று இன்றியமை யாமைக்காகவும் என்றும் வாழும் இலக்கியமாகிவிட்டது. புலவனின் உள்ளத்தெழுச்சியை பாட்டுக்குரிய யாப்பில் புகுத்துவதை விட பாட்டின் சந்தமே புலவனின் உள்ளத்தெழுச்சியைக் காட்டும் வண்ணம் தன் கவிதைகளை அவர் அமைத்திருக்கிருர். யாப்பும் சந்த மும் புலவனின் தேவைக்கேற்ப மாறும். தம் விருப்பத்திற்கேற்ப, யாப் பையும் சந்தத்தையும் மாற்றியமைத்துக் கவிதைகளைப் படைக்கும் கட்டற்ற உரிமை பெரும்பாலும் ஸ்ரீகண்டய்யாவால் கன்னடப் புலவர் களுக்குக் கிடைத்த பரிசு எனலாம். அவருடைய 'ஆங்கிலப் பாடல் கள்' என்னும் நூல் வெளிவந்த அன்றே—அன்றிரவே—கன்னடியர் ஒவ்வொருவரும் பாடத் தொடங்கிவிட்டனர்; புத்துணர்வுக் கவிதை கள் பீறிட்டு வெளிவரத் தொடங்கின; புதுக்கவிதைஉலகம் திடீரெனப் பிறவியெடுத்தது. செவிகளும் கண்களும் உயிர் பெற்றெழுந்தன. குயிலின் பாட்டு, மாவின் தளிர், கண்ணைக் கவரும் வானவில். விளைந்த கதிரைத் தலையசைக்கச் செய்யும் தென்றல் ஆகியவை கவிதைக்குரிய தலைப்புகளாயின. பெட்டியிலிருந்து எடுத்து அழகு பார்க்கும் அணிகலன்களாகக் கவிதை விளங்கிய காலம் மலையேறி விட்டது. அனைவரும் கண்டும் கேட்டும் நுகரத்தக்க எளிமைப் பொரு ளாகக் கவிதை மாறிவிட்டது. காப்பியங்களின் செல்வாக்கு ஓங்கி யிருந்த காலத்தில் தமக்கென இடம் பெற முடியாமல் ஒதுக்கப்பட் டிருந்த தனிப்பாடல்கள் தமக்கென ஒரு புதிய உலகத்தை உண்டாக் கிக் கொண்டன. எந்தப் பொருளுக்கும் எந்த உணர்வுக்கும் ஒருவன் கவிதை வடிவு தரலாம் என்னும் புதிய கண்டுபிடிப்பு அனைவராலும்

ஏற்றுக் கொள்ளப்பட்டது. கவிஞன், மொழியில் புலவனுக இருக்க வேண்டியதில்லை. எவரும் எளிய சொல்லாட்சிகளில் பொலிவு கூட்டிக் கவிதை படைக்க முடியும்.

மனிதனை மனிதனுகக் காட்டுவதிலும் இயற்கையை உள்ளது உள்ளபடி புனைவதிலும் கவிதையழகு மிளிரும்; இதுவே புதுக் கவிதையின் இலக்கணம். மாந்தரின் துன்பங்களைப் படம் பிடித்து காட்டுவது பின்னும் மேலானது. தரத்தில் தாழ்ந்து வந்த கன்னட இலக்கியத்தின் வெற்றுரவாரப் போக்கு திசைமாறியது. காப்பியங் களின் காலம் மலையேறிவிட்டது என்று பொதுமக்களும் பேசத் தொடங்கினர். இலக்கிய மறுமலர்ச்சியாளர்கள் பழங்காப்பியங் களுக்கு ஒவ்வொரு நேரத்தில் புத்துயிரூட்டினர். இருபது ஆண்டு களுக்குப்பின் திரு. குவெம்பு என்று அழைக்கப்பட்ட டாக்டர்கே.வி. புட்டப்பாவின் 'இராமாயண தரிசனம்' என்னும் நூல் புதுக்கோலம் புனைந்து வந்த பழங்காப்பியமாக மக்களிடையில் உலவியது.

கன்னட இலக்கிய வரலாற்றில் நடந்த பயன்மிக்க மறுமலர்ச்சி யின் நினைவுச் சின்னமாக 'ஆங்கிலப் பாடல்கள்' என்னும் நூல் என்றும் நின்று நிலவும் தன்மை பெற்றிருப்பது நினைவு கூரத்தக்கது.

**தண்டுப்போர் (கதாயுத்த) நாடகம்**

ஐந்து காட்சிகளைக் கொண்ட இந்நாடகம் 1925-ஆம் ஆண்டு நடிக்கப்பட்டது. 1926-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. பத்தாம் நூற்றுண்டுக் கவிஞர் இரன்னனின் 'சாகசபீம விசயம்' என்னும் நூலிருந்து எடுக்கப்பட்ட பகுதியின் அடிப்படையில் அமைந்த நாடகம் இது. மாபாரத மூலக்கதையைத் தழுவிய இரன்ன, கவி ஞரின் நூல் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக அமைந்தது. பம்ப பாரதம் எனப்படும் 'விக்ரமார்ச்சுன விசயம்' இரன்ன கவிஞ ருக்குக் கிடைத்த மூல நூல்களில் முதன்மையானது. இரன்னனின் காப்பியக் கதையில் ஒரு நல்ல நாடகம் ஒளிந்து கொண்டிருப்பது ஸ்ரீகண்டய்யாவுக்குத் தெரிந்தது. அவர் அந்நாடகத்துக்கு வடிவு கொடுத்து நிலையான வாழ்வு கொடுத்து விட்டார். இந்நாடகத்தில் செய்யுளமைப்பும் நடையும் பெற்றுள்ள பெருமை இரன்ன கவிஞ ரையே முழுமையாகச் சேரும். செய்யுளின் அளவு நோக்கினுலும் நாடகத்தில் குறைந்த அளவு செய்யுள்களே இடம் பெற்றுள்ளன. நாடகக் கலை நுணுக்கத்திற்கென நாடகம் கட்டுப்படுத்தப்பட வேண்டியிருந்ததால் இரன்ன கவிஞரின் அழகிய செய்யுள் மற்றும் உரைநடைப் பகுதிகளை ஓரளவு விட்டுவிட நேர்ந்தது.

நாடக வடிவம் தந்ததோடன்றி, மூல நூலிலிருந்து எடுத்த பத்தி களை இடத்திற்கும் பொருட் பாங்கிற்கும் ஏற்ப இணைப்பதிலும், சொற் ருெடர்களை இடமாற்றுவதிலும், ஓரிரு இடங்களில் செய்யுள்களை

இடம் பெயர்ப்பதிலும் ஸ்ரீகண்டய்யா தன் சொந்த நாடக அமைப்புத் திறனைக் காட்டியிருக்கிறார். இரன்ன கவிஞரின் நூலிலிருந்து தேவையான பகுதிகளைப் பொறுக்கியெடுத்து நாடகக் காட்சிகளுக்கு ஏற்ப வகைப்படுத்தியிருக்கிறார். இந்நாடகத்தில் ஸ்ரீகண்டய்யாவின் சொந்தப் படைப்பாக அல்லது அதிகமாக என்ன இருக்கிறது என்று சிலர் வினவக் கூடும். சில நீக்கல்கள், சில சேர்ப்புகள், உரையாடல் ஆள்மாற்றங்கள், சில பத்திகளின் மாற்றம் ஆகியவை நாடகக் கருத்தை முழுமையாக மாற்றிவிடும். இந்நாடகத்தைக் கண்ட பின் நம் உள்ளத்தில் ஏற்படும் கருத்து மூல நூலைப் படிப்பதால் ஏற்படும் கருத்தினும் வேறுபட்டே இருக்கும். ஆதலால், இந்நாடகம் அவருடைய தனித்தன்மையான படைப்பைக் காட்டுவதாகக் கருத வேண்டியுள்ளது.

நாடகக் கதை நிகழ்ச்சிகளும் கதை மாந்தரின் செயல்களும் மூல நூலில் உள்ளவாறே காட்டப்படுகின்றன. கௌரவர்க்கும் பாண்டவர்க்கும் இருந்த பகைமையின் விளைவான போர் முடிகிறது. கௌரவரின் பக்கத்திலிருந்த பெரும் தானைத் தலைவர்கள் துரோணர், கருணன், சல்லியன் ஆகியோர் மடிகின்றனர். அவர்களுள் வெல்லுதற்கரிய பெருவீரனை வீடுமன், ஏந்திய படைக்கலங்களைத் தானாக வீசியெறிந்துவிட்டு அம்புப் படுக்கையில் கிடந்தவாறு சாவின் தழுவுதலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான். திருதராட்டிரனுடைய நூறு பிள்ளைகளுள் துரியோதனன் ஒருவனே எஞ்சி நிற்கிறான். இந்த நாடகத்தைப் பொறுத்தவரை அசுவத்தாமன் ஒருவனே அரசன் பக்கத்தில் எஞ்சி நிற்கும் வீரனாகக் காட்சியளிக்கிறான். பாண்டவர்கள் போரில் வென்றனர். எனினும், பாஞ்சாலியின் மனங்குளிரவில்லை. நாடகத்தின் முதற் காட்சி, தருமன் வீமனை மன மாற்றி துரியோதனனைக் கொல்லாமல் தப்பிக்கச் செய்துவிடுவானோ என்னும் பாஞ்சாலியின் ஐயங்கலந்த அச்சத்தோடு தொடங்குகிறது. பலர் முன்னிலையில் தன்னை அவமானப் படுத்தியதையும், துரியோதனன் தொடையைத் தெரியக்காட்டி, 'வந்து உட்கார்' எனக்கூறியதையும் பாஞ்சாலியால் மறக்க முடியவில்லை. 'துரியோதனின் தொடையைப் பிளந்து கொல்வேன்' என்னும் தன் சூளுரையை வீமன் பாஞ்சாலிக்கு நினைவு படுத்துகிறான்; சூளுரையை மெய்ப்பித்துக் காட்டுவேன் என்று உறுதியளிக்கிறான்.

பாஞ்சாலியின் சூளுரைக்கு மேலும் வலிவூட்டும் வகையில் கண்ணன் துரோணரிடம் 'இன்று கதிரவன் மேற்கில் மறைவதற்கு முன் துரியோதனன் கொல்லப்படாவிடின் யாரும் அவனை இனிக் கொல்ல முடியாது' என்கிறான். முதற்காட்சியில் தன் சூளுரையை நிறைவேற்ற வேண்டும் என்னும் வெறியில் வீமன் உலவிக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம்.

இரண்டாம் காட்சியில் துரியோதனன் தன்னைக் காட்டிக் கொடுத்த குற்றத்துக்குரியவர்கள் என்று துரோணரையும் அசுவத் தாமனையும் கடுமையாகத் தாக்கிப்பேசுவதைப் பார்க்கிறோம். சஞ்சயன் பாண்டவரைப் புகழ்ந்ததே அவனுடைய சீற்றத்திற்குக் காரணமாயிற்று. துரியோதனன் வீமனையும் கண்ணனையும் வசை மாரிப் பொழிந்தான். எவ்வளவு வசைமாரி பொழிந்தாலும் பாண்டவர்களுக்குச் சற்றும் உரைப்பதில்லை என்று மேலும் இகழ்ந்தான். துரியோதனனை அமைதிகொள்ள திருதராட்டிரன் செய்த முயற்சிகள் தோல்வியடைகின்றன. இருப்பினும், வீடுமரைக்கலந்து உரையாடி மேற்கொண்டு நடக்க வேண்டியவற்றிற்கு முடிவுசெய்ய துரியோதனன் ஒப்புக்கொள்கிறான்.

மூன்றும் காட்சியில் வீடுமன் அம்புப்படுக்கையில் படுத்திருக்கும் இடம் நோக்கி துரியோதனன் வருகிறான். வழியில் பிணந்தின்னவந்த மூன்று பேய்களைக் காண்கிறான். அந்தப்பேய்கள் துரியோதனன் செய்த தீவினைகளை எடுத்துச் சொல்லி, இகழ்ந்து பேசியவாறு, அவன் நாளை கதிரவன் மறையும் வரைதான் உயிரோடிருப்பான் என்று கூறுகின்றன. போர்க்களத்தில் கருணன், துச்சாதனன் போன்ற தானைத்தலைவர்களின் உடல்களைக்கண்டு உள்ளம் நெக்குடைகிறான். இளமை நிறையாத கட்டிளங்காளை அபிமன்யுவின் உடலைப் பார்த்ததும் அவனுடைய பெருவீரத்தை துரியோதனனால் பாராட்டாமலிருக்க முடியவில்லை. வீடுமர் துரியோதனனை நோக்கி, ‘ இனியாவது அமைதியுடன்பாடு செய்துகொள் ’ என்று அறிவுரை கூறுகிறார். ஆனால், துரியோதனன் தான் சொல்வதை ஒப்புக்கொள்ள மாட்டான் என்றுணர்ந்த வீடுமர் மறுநாள் வரை வைசம்பாயன ஏரியின் நீருள்முழுகியிருக்குமாறு வழிவகை கூறுகிறார்.

நான்காம் காட்சியிலும் ஐந்தாம் காட்சியிலும் வீமன் கண்ணன் தருமன் ஆகியோர் துரியோதனனை ஏரியில் சென்று தேடுகின்றனர். வீமனின் குத்தலான பேச்சுக்களைக் கேட்டுத் துரியோதனன் நீரிலிருந்து சினம்பொங்க வெளியில் வருகிறான். துரியோதனனுக்கும் வீமனுக்கும் தண்டுப்போர் (கதாயுத்தம்) நடைபெறுகிறது. வீமன் மயங்கிக் கீழேவிழுகிறான். துரியோதனன் கீழே விழுந்த வீமன் மீது பழிவாங்க நினைக்காமல், இரக்கம் காட்டுகிறான். வீமன் மயக்கந் தெளிந்து எழும்வரை விசிறிபோல் கதாயுதத்தைச் சுழற்றி காற்று வீசச் செய்கிறான். வீமன் மயக்கந் தெளிந்து எழுந்ததும் மீண்டும் இருவருக்கும் போர் தொடங்குகிறது. வீமனின் சூளுரையை நினைவூட்டுவதற்காகக் கண்ணன் துரியோதனனின் தொடையைச் சுட்டிக் காட்டுகிறான். வீமன் உணர்ச்சி மேலிட்டவனாய் துரியோதனனின் தொடைமேல் கதாயுதத்தால் தாக்கி வீழ்த்துகிறான். துரியோதனன் அடியற்ற மரம் போல் வீழ்கிறான். கீழே விழுந்த துரி

யோதனனை வீமன் காலால் உருட்டியவாறு உதைக்கிருன். வீமனின் தலைக்குமேல் பழிவாங்கும் தேவதைகள் சுற்றித்திரிவதைத் தருமன் காண்கிருன். பிறகு பாண்டவர் அனைவரும் நீலமலைக்குச் சென்று, பழிவாங்கும் தேவதைகளிட மிருந்து பாண்டவரைக் காக்குந் திறம் வாய்ந்த சிவபெருமானை வழிபட்டுத் தம்மைக் காக்க வேண்டு கின்றனர்.

சார்ந்துவரும் கிளைக்கதைகள் இல்லாமலிருந்தால் நாடகம் பின் னும் நன்ருக இருக்கும். அசுவத்தாமன் உள்ளே நுழைகிருன். சாகுந்தருவாயிலுள்ள துரியோதனன் ஆசையை நிறைவேற்றும் உறுதியோடு 'பாண்டவர்களின் தலைகளைக் கொய்து வருகிறேன்' என்று சூளுரைத்தவனுய் அசுவத்தாமன் புறப்படுகிருன். ஆனல், அவன் வெட்டிக் கொணர்ந்த ஐந்துதலைகளும் பாஞ்சாலியின் ஐந்து குழந்தைகளின் தலைகள். அசுவத்தாமன் குழந்தைகளைக் கொன்ற கொடுந்தீவினை புரிந்து விட்டதைத் துரியோதனன் எடுத்துக் கூறு கிருன். கடவுள் முன்னிலையில் மனிதன் ஒரு ஆற்றலும் இல்லாதவன் என்பதையும் மாலையில் கதிரவன் மறைவது போல் மனிதனும் சாவு என்னும் மேலைக்கடலில் மூழ்குகிருன் என்பதையும் துரியோதனன் நன்குணர்கிருன்.

கவிஞர் இரன்னனின் கதைப்போக்கில் ஒருவிழுமிய நாடக நுணுக்கம் உள்ளது. அதன் அமைப்பு துன்பியல். காப்பியத்தலைவர் களின் கொடிய விலங்கியல்புகள், சீரும் சிறப்புமாக வாழ்ந்த வல்லரசு களின் வீழ்ச்சி, அடுத்தடுத்து வரும் தோல்விகள், தொலையாத துன்பங்கள், தொடரும் சாவுகள், அழிவைத்தேடித்தரும் குற்றங்குறை கள், ஊழின் வலிமை ஆகிய துன்பியல் கூறுகள் இக்கதையில் உள்ளன. இரன்ன கவிஞர் இவற்றை மூலக்கதையிலிருந்து அப்படியே தழுவிக் கொண்டார். இவருடைய கதைப்பாங்கினைப் புதிய இலக்கிய நோக்கில் துன்பியல் நாடகமாக்க முடியும் என்று ஸ்ரீகண்டய்யா நினைத்தார். இந் நாடகத்தில் ஒருநாள் காலையில் கதை நிகழ்ச்சி தொடங்கி அன்று மாலையிலேயே முடிவடைகிறது. அனைத் துக் காட்சிகளிலும் போர்க்களமே கதை நிகழிடமாக அமைந் துள்ளது. கதை விளக்கங்களையும் உரையாடல் மேலொப்பனைகளை யும் நீக்கிக் கதைக் கருவை மட்டும் பார்த்தால் துன்பியல் ஒன்றே எஞ்சி நிற்பதைக் காணலாம்.

ஸ்ரீகண்டய்யா இந்நாடகத்தை எழுதத் தொடங்கிய போது பெருஞ்சிக்கலுக்குள்ளானுர். இந்தத் துன்பியல் நாடகத்துக்கு யாரைக்கதைத்தலைவனுக்குவது என்பதே அச்சிக்கல். இரண்டா யிரம் உரையிடையிட்ட பாட்டுடைச்செய்யுள் நூலில் இச்சிக்கல் எழ வில்லை. ஏனெனில், இரன்ன கவிஞர் வீமனையே பாண்டவருள்

மேலானவனுகக் கருதியதால், வீமன் கதைத்தலைவனுகும் தகுதியைப்பெற்றுவிடுகிருன். மாபாரதக் கதையில், முற்றிலும் மாருக, இரன்ன கவிஞன் காப்பியத் தலைவனுனத் தருமனைத் துறவு பூணச் செய்து வீமனுக்கு முடிசூட்டி அரசனுக்குகிருன். ஆனுல், இக்கதை துன்பியல் முடிவு பெற வேண்டுமாயின் துரியோதனனே கதைத் தலைவனுக இருக்கத்தக்கவன். வீமனைவிட துரியோதனனே நாடக மேடையில் அதிக நேரம் காட்சியளிக்கிருன். துன்பியல் முடிவு எய்தத் தக்க இயல்பான குறைபாடுகள் உள்ளவன் அவனே. சீரும் சிறப்பும் குலவும் செல்வ வாழ்வினின்றும் வீழ்ச்சியடைபவனும் அவனே. அவனைக் கண்டு அனைவரும் அஞ்சுவதற்கு மாருகக் கழிவிரக்கம் கொள்கின்றனர். ஊழின் வலிமையும் கடவுளரும் அவனுக்கு மாருகவே செயல்படக் காண்கிறேம். அவனுக்கு இறுதிவரும்வரை ஊழின் தாக்குதல் கண்ணுக்குத் தெரியாவிடினும், நடைபெற்ற நிகழ்ச்சிகளை உள்ளபடி கோவைப்படுத்திஞல் அவனியல்புகளே அவனுடைய கேட்டிற்கு வழி வகுத்ததைக் காணலாம். தொடை முறிந்து சாகவேண்டிய ஒரு சாபக் கேடும் அவனுக்கிருந்தது. தன் விடாப்பிடிப் போக்கிஞல் அந்தச் சாபக்கேட்டை விரைவாக வரவழைத்துக் கொண்டான்.

துன்பியல் நாடகக் கதைத் தலைவனுகுமளவுக்கு அனைத்து இயல்புகளையும் துரியோதனன் பெற்றிருக்கிருஞ? பேரரசனுக இருந்ததால் தாஞக விளைந்த செல்வாக்கு தவிர வேறு குறிப்பிடத் தக்க சிறப்பியல்புகளாக எவற்றைக் கூறமுடியும். துன்பியல் காப்பியக் கதைத்தலைவன் முற்றிலும் நல்லவனுக இருக்க வேண்டும் என்னும் கட்டாயம் இல்லை. நற்பண்புகளின் உண்மை அல்லது இன்மை துன்பியல் கதைத்தலைவனின் இலக்கணமாகிவிடாது. அவனிடம் எளிமையும் கொடைத்தன்மையும் நிரம்பியிருந்தது. பொதுமாந்த இயல்பினின்றும் அவனை உயர்த்திக்காட்டும் நல்லியல்புகள் அல்லது உள்ளத்தில் நெடுநாள் ஊறிக்கிடந்த உயர்ந்த குறிக்கோளை அடைய மேற்கொண்ட அருஞ்செயல்கள் அவனிடம் குடிகொண்டிருந்தனவா ?

அவனிடமிருந்த ஒரு பண்பு அனைவரையும் கவர்ந்தது. பாண்டவர்க்கு ஈ அமரும் இடமும் தரமாட்டேன் என்னும் விடாப்பிடியே அது. பணிந்து விடுவதைவிடப் போரிட்டுச் சாவதையே மேலானதாகக் கருதிய அவனுடைய மனப்பாங்கு வியக்கத்தக்கதாகும். அவன் விட்டுக்கொடுத்துப் பணியும் இயல்புடையவனுகப் படைக்கப் பட்டிருந்தால் அது கலையழகில்லாத செயற்கையமைப்பாக இருந்திருக்கும். அப்படியாயின், தன் விடாப்பிடிக் கொள்கையால் தன்னைத் தானே அழித்துக் கொள்ளும் இயல்புடையவனுக்கு, உலகம், கதைத்தலைவனுகும் தகுதியை அளிக்கும் என்று கூற

முடியுமா? இந்த நாடகத்தின் இரு காட்சிகள் முழுவதிலும் அவன் தன் செய்கைக்கு வருந்துவதன்றி வேறொன்றும் செய்வதாகக் காணோம்.

ஸ்ரீகண்டய்யா 'கன்னட இலக்கிய வரலாறு' பகுதி I-இல் (Kannada Kaipidi. Vol., II p 599.) கூறுவதாவது: 'இரன்ன கவிஞரின் சாகசபீம விசயத்தில் உள்ளத்தைத்தொடும் பகுதியானது கவிஞர் துரியோதனன் மீது காட்டும் இரக்கமாகும். அது காப்பிய அமைப்புக்காகக் காட்டப்படும் பரிவு அன்று; கழிவிரக்கமேயாகும்.' இது கதைப் போக்கின்படி பொருத்தமானது. துரியோதனன் என்றதும் அச்சம் தோன்றுவதில்லை, இரக்கமே சுரக்கிறது. இரன்ன கவிஞர் எந்தெந்த இயல்புடையவனாகத் துரியோதனனைக் காட்டியிருக்கிறாரோ அதே இயல்பினனாகச் ஸ்ரீகண்டய்யாவும் துரியோதனனைக் காட்டியிருக்கிறார். துரியோதனனுக்குரிய கதைக் கோப்புக்குள் எங்கெங்கு அவனிடம் பரிவு காட்டமுடியுமோ அங்குமட்டும் பரிவு காட்டியிருக்கிறார் மற்ற வகையில் இரன்னனின் காப்பியத்தில் உள்ளதைக் காட்டிலும் துரியோதனன் நல்லவனாகவோ தீயவனாகவோ காட்டப்படவில்லை.

துரியோதனனுடைய பண்பின் சில கூறுகள் அவனுக்கு அவைவரின் இரக்கத்தையும் பரிவையும் தேடித்தருகின்றன. நாடகக் கதையின்படி சம்புக் கதையைப் போலவே, கௌரவர்களுக்குத் தலைமை தாங்கும் நிலையில் துரியோதனனின் ஆளுமைத் திறன் ஒளி பெற்றுக் காணப்படுகிறது. முடிசூட்டுவிழாவின் போது ஆரவாரம் ஒன்றைத்தான் காண்கிறோம். பேரரசனாக வாழ்ந்த அவனுக்கு நேர்ந்த வீழ்ச்சி அவனிடம் இரக்கம் கொள்ளச் செய்கிறது. மேலுஞ் சில நல்லியல்புகளும் அவனிடம் காணப்படுகின்றன. கருணன் மீது துரியோதனன் கொண்டிருந்த அளவற்ற அன்பும், தம்பிகளிடம் காட்டிய பரிவும் நம்மை நெகிழ வைக்கின்றன. தம்பிகளிடம் காட்டிய பரிவு கொடுஞ்செயல்களைத் தூண்டப் பயன்பட்டதாயினும் அவ்வுணர்வு முற்றிலும் அன்புணர்வே. தம்பிகள் போர்க்களத்தில் இறந்து கிடப்பதைக் கண்ட துரியோதனன் மனம் கசிந்துருகிக் கண்ணீர்க்காவியமாகிறது. இளஞ்சிறுவனை அபிமன்யுவை உயர்வாகப் போற்றுகிறான். இரண்டாம் காட்சியில் துரோணர், அசுவத்தாமன் போன்றோர் மீது சினம் பொங்கச் சீறித்திரியும் துரியோதனன் பின் காட்சிகளில் தன் செய்கைக்கு வருந்துகிறான். நாடகத்தின் இறுதிக் காட்சியில் எல்லாம் வல்ல இறைவனிடம் தன்னை ஒப்படைத்துக் கொள்கிறான். நாம் என்றும் கண்டிராத பணிவும் அடக்கமும் கலந்த பெருமிதமான சொற்களைத் துரியோதனன் வெளிப்படுத்துகிறான். எல்லாவற்றினும் இன்றியமையாததும் நாடகம் காண்போர் மனதில் பதியத்தக்கதுமாகிய நிகழ்ச்சி, தனக்குப்

பிறவிப் பகைவனை வீமன் தண்டுப் போரில் போர்க்களத்தில் மயங்கி வீழ்ந்தபோது துரியோதனன் அவன் மீது இரக்கம் காட்டியதாகும். வீமன் கீழே விழுந்த போது துரியோதனன் பேசுகிருன். "இது அறஞ்சார்ந்தபோர். கீழே விழுந்தவனை நான் தாக்கமாட்டேன். அவன் எழும்வரை நான் பொறுத்திருக்கிறேன். என் தண்டால் சுழற்றி அவன் மீது காற்று வீசச் செய்கிறேன்."

துரியோதனனின் இந்தக் கூற்று, அவனுடைய நேர்மைக்கும் அருளுள்ளத்திற்கும் சான்ருவதோடு, வீமனை உலகம் பழிக்கவும் ஒரு வாய்ப்பளித்துவிடுகிறது. தன்னைக் கொல்லாமல் இரக்கங்காட்டிய துரியோதனனை வீமன் தொடைமுறியத்தாக்கி வீழ்த்தவில்லையா? இது எத்துணைப் பெரிய முரண்பாடு! துரியோதனனின் உளப்பாங்கு கதை நிகழ்ச்சிகளின்படி உயர்வானது. கதை நிகழ்ச்சிகள் இவ்வாறு தொடர்வதால் துரியோதனனைச் சிறந்த நட்பாளன் என்றும் சிறந்த உடன் பிறப்புணர்வினன் என்றும் நம்புகிருேம். ஆனல், தன்னைப் பொறுத்தவரை நற்பண்புகளில் தன்னை நிலைநிறுத்திக் கொண்டான் என்று கூறமுடியவில்லை.

இதே துரியோதனன் வீமனை நஞ்சிட்டுக் கொல்லவும் அரக்கு மாளிகைக்குத் தீவைத்து உறங்கிக் கொண்டிருந்த பாண்டவர்களைக் கொல்லவும் முயன்றதையும், அரசவையில் துச்சாதனனை ஏவி, பாஞ்சாலியின் கூந்தலைப் பிடித்து இழுத்துவரச் செய்து துகிலுரியச் செய்ததையும் அறியாதார் யார்? இக் கொடுஞ் செயல்கள் துரியோதனனின் இரக்கமற்ற அரக்க நெஞ்சத்தைக் காட்டுகிறதா அல்லது பெருக்கெடுக்கும் அன்புணர்வைக் காட்டுகிறதா? பிறவிப் பகைவர்களோடு, வாழ்வா சாவா என்னும் போராட்டத்தின் இறுதிக்கட்டமான போர்க்களத்தில் பொங்கிப் புகையும் சினத்தோடு கொடுமையெல்லாம் ஒன்ருகத் திரண்ட கொடியவனுகக் காட்சிதராமல் அறநெறி பேசும் நன்மனத்தவனுகக் காட்சி தரும் துரியோதனனின் நிலையை நாம் நம்பவேண்டியுள்ளது.

துரியோதனனுக்குச் சார்பான மற்ருெரு கூற்றும் என் நினைவிலிருக்கிறது. துரியோதனன் திட்டமிட்டுச் செய்த தீங்குகள் அனைத்தும் காலத்தால் மறக்கப்பட வேண்டிய பழையவை. துரியோதனனின் கொடுமைகள் நடந்து பதின் மூன்ருண்டுகளுக்குப்பிறகு போர் நடக்கிறது. இரன்னனின் காப்பியத்திலும் ஸ்ரீகண்டய்யாவின் நாடகத்திலும் நிகழ்ச்சிகள் அடுத்தடுத்துக் காட்டப்படுவதுபோல அவ்வளவு விரைவாக, உண்மையில் கதை நடைபெறவில்லை. வியாச பாரதத்தில் துரியோதனன் எத்துணைக் கொடுமைகளைப் புரிந்தானே அதே இயல்புடையவனுகப் பிற்கால பாரதக்கதைகளிலும் படைக்க வேண்டியதில்லை. பிற்காலக் காப்பிய துரியோதனன் முற்றிலும் வேருன இயல்புடையவன். ஆனல், அவன் செய்த

கொடுமைகள் மாற்றப்படவுமில்லை ; மறைக்கப்படவுமில்லை. அவை உயிர்ப்புள்ள நிகழ்ச்சிகளாய் நிலவி வருகின்றன. அக்கொடுமைகள் பாஞ்சாலியின் கூற்றிலும் வீமனின் வெகுண்டுரைப் பேச்சிலும் வெளிப்படுகின்றன. ஏன் ! துரியோதனன் கூட, தான் பாண்டவர்க்குச் செய்த கொடுமைகளுக்காக வருந்தாவிடினும் அவற்றை நினைத்துப் பார்க்கத் தவறுவதில்லை. துரியோதனனின் கொடுமைகள் நிகழ் நிலையின.

மிகக் கொடியவனிடம் நற்பண்புகள் இருக்கக் கூடாதா ? இருக்க முடியும். கொடுமனத்தவனுகக் காட்டப்படும் துரியோதனனிடம் உள்ள நற்பண்புகளைக் கலைநுட்பம் வாய்ந்த கவிஞனால் தான் படம் பிடித்துக் காட்ட முடியும். நற்பண்புகளைக் காட்டுமுன், கற்போர் அதனை ஒப்புக்கொள்ளத்தக்க சூழலை உருவாக்க வேண்டும். இரன்னனின் காப்பியத்திலும் இந்த நாடகத்திலும் துரியோதனனின் பெருந்தன்மைகள் காணக் கிடைக்கின்றன என்பதைவிட இரன்னனின் உள்ளத்தில் காணக்கிடந்தன என்பது பொருந்தும். கொடுமனத்திடையில் பாலைவனத்துப் பசுஞ் சோலைபோல் துரியோதனனிடம் சிலநல்லியல்புகள் இருந்தன. மாந்தரிடம்பொதுவாகக் காணப்படும் முரண்பட்ட இயல்புகள், இரன்னன் எடுத்துக் காட்டியபடி இந் நாடகத்திலும் உள்ளன. இரன்னன் நடுநிலையுடன் சித்தரித்த துரியோதனனை ஸ்ரீகண்டய்யா உள்ளபடியே படைத்துக்காட்டியுள்ளார்.

தன்னந் தனியனுய்ப் போர்க்களத்தில் நிற்கும் துரியோதனனைப் பார்க்கும் போது நாம் மனமிரங்குகிறோம். பாண்டவர்களைக் காலமெல்லாம் வெறுப்பதிலும் அவர்களுக்கு ஆற்றொணுத் துன்பம் தந்து மகிழ்வதிலும் ஆர்வம் காட்டிய சகுனி, துச்சாதனன், கருணன் ஆகியவர்களையே, தான் கண்டு, உலவி குலவி வாழும் ஒரே உலகமாகத் துரியோதனன் எண்ணியிருந்தான். அந்த உலகம் அடியோடு அழிந்துவிட்டது. கொடுமைசெய்யத் துணை நின்ற அனைவரும் மடிந்து விட்டனர். பாண்டவர்கள் வெற்றிப் படிகளில்ஏறி வருகின்றனர். இதைக் காணப்பொறுக்காத துரியோதனன் அலறுகிறுன். " அந்தோ ! என் ஆசைகள் அழிந்தன. என் குடும்பமும் மரபும் அழிந்தது. இந்த உலகம் வெறிச்சோடிப் போய் விட்டது " எனப் புலம்புகிறுன். தன்னுள்ளத்தில் நற்பண்புகளும் ஈவு இரக்கமும் வளரவிடாமல் அழித்து விட்டதனுல் தான் தனக்குக் கேடுவந்தது என்று உணர்ந்ததன் விளைவாகத் தோன்றிய புலம்பல்இது. துரியோதனனைப்பார்த்து நாம் இரக்கப்பட்டாலும் துன்பியல் கதைத்தலைவனுக இருப்பதற்கு ஏற்ற வலுவான அல்லது போதுமான இயல்புகள் அவனிடம் இல்லையென்றுதான் சொல்ல வேண்டும்.

இரன்னனின் காப்பியத்தில் உள்ளது போலவே இந்நாடகத்தி லும் துரியோதனனின் குறைபாடுகளைக் காண்கிறோம். ஆதலால், நாம் வீமனின் பண்புக் கூறுகளை ஒருபடி மேலானதாகக் கருத வேண்டியுள்ளது. திறனாய்வாளர்கள் வீமனை உருப் புனைந்து காட்டு வதைவிட, நாம் அவர்கள் நோக்கில் நின்று புறச்சூழல்களின் துணை யால் அவனைப் புரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. ஸ்ரீகண்டய்யா தன் 'கன்னடஇலக்கிய வரலாறு' என்னும் நூலில் இரன்ன கவிஞ ரைப் பாராட்டும் வாயிலாக, 'வீமனை அவன் நிலையிலிருந்து இறக்கா மல் துரியோதனனை உயர்த்திக் காட்டியிருக்கிறார்' என்று கூறுகிறார். ஆனால், இந்நாடகம் வீமனை ஒருபடி தாழ்த்திக் காட்டியிருக்கிறது என்றும் சிலர் கூறுவர். நாடகத்தில் வருவது போல் இரன்ன காப்பி யத்தில் வரும் வீமன் தருமனைக் குத்தலாக இழித்துப் பேசுவதில்லை. மாபாரதத்தில் வரும் வீமனும், தருமன் அறத்தையும் பொறுமையை யும் வலியுறுத்தும் போதெல்லாம் பொறுமையிழந்தவனாய் நெஞ்சுக் குள் புகைந்து பொருமுபவனாய் முரட்டுத்தனம் காட்டுபவனாய் சித் தரிக்கப்படுகிறான். தரையில் வீழ்ந்த துரியோதனனின் மணிமுடி யணிந்த தலையைக் காலால் உதைத்து உருட்டும் விலங்காண்டியாக வும், பச்சைக் குருதியைப் பாலாய் நினைத்துக் குடிப்பவனாகவும் வீமன் நம் கண்முன் நிற்கிறான். இதுவே வீமனின் உண்மையியல்பு ஆகி விடாது. வீமனின் இயல்பு இந்நாடகத்திலும் சித்தரிக்கப் படுகிறது.

ஸ்ரீகண்டய்யா வீமனின் பக்கம் சாய்பவர் என்று கூறமுடியாது. தண்டுப் போர் (கதாயுத்தம்) காட்சி அவருக்கு மனநிறைவு தந்த தாகத் தெரியவில்லை. அக்காட்சியை நாடகத்தில் மிகவும் சுருக்கி விட்டார். வீழ்ந்த எதிரியின் தலையைக் காலால் உதைத்த போதும் துரியோதனன் தொடைமேல் தாக்கியபோதும் வீமனுக்கு அந்நிகழ்ச் சிகள் மனவுறுத்தலாகவே இருந்திருக்கும். காப்பியக் கதைத்தலைவர் களை நாம் புரிந்து கொள்ளுமுன் இரண்டு செய்திகளை மனத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். அவர்கள் பொதுவகை மாந்த நிலை க்கு மீறிய உள்ளுணர்வுகளோடு படைக்கப் பட்டிருப்பதால் இயல் பாகவே கடும் உணர்வுகள் மேலோங்கிய மன நிலையினர். வீமனுக்கே உரிய அவன் மன நிலையினின்று பார்த்தால் அவன் செய்கை நமக்கு வியப்பூட்டாது. நம் மனநிலையில் நின்று அவர்களைப் பார்க்கக் கூடாது. வீமன் இயல்பாகவே குத்தலாகப் பிறரைச் சீண்டிப்பேசும் பழக்கமுள்ளவனாதலால், அவன் பேச்சு, கோழைகளையும் பொறுமை சாலிகளையும் கூட கட்டுக் கடங்கா கடுஞ்சினங் கொள்ளச் செய்து விடும்.

பெருந்திரளாக அவையோர் கூடிய கொலு மண்டபத்தில் பாஞ் சாலியின் கூந்தலைப் பிடித்து துச்சாதனன் இழுத்து வந்தான். போர் வீரரும் பிறரும் நிறைந்த அவைக்களத்தில் பாஞ்சாலியைத்

துகிலுரிந்து அவமானப் படுத்துவதால் துரியோதனனுக்கும் துச்சாதனனுக்கும் என்ன பெருமை கிடைக்கப் போகிறது? இதனை எண்ணிப்பார்த்து, துரியோதனன் மிகக்கொடியவனா வீமன் மிகக் கொடியவனா அல்லது யாருடைய செய்கை இயற்கையின் வரம்புக்கு உட்பட்டது என்று சிந்தித்துப் பாருங்கள்.

பாஞ்சாலியைத் துகிலுரிந்த கொடுமையை யார்தான் வெறுமனே பார்த்துக் கொண்டிருப்பார்கள்? வீடுமன் துரோணன் போன்ற பெரியவர்கள் பேசாமல் அந்தக் கொடுமையைப் பார்த்துக் கொண்டிருந்தது இயற்கையான மாந்தர் இயல்புக்கு ஒத்ததாகுமா? கொடுமை நடப்பதைக் கண்ணாரக் கண்டும் தலை குனிந்திருந்தால் அறம் வாழ்வு பெறுமா? அத்தகு சூழலில் மனம் சற்றும் திரியாமல் அறம் ஒன்றிலேயே கருத்தூன்றியவனாய், தம்பிகளுக்குப் பொறுமை பொறுமை என்று அறிவுரை சொல்லிக்கொண்டிருந்த தருமனை உலகம் புகழ்கிறது; நாமும் புகழ்கிறோம். தருமனைப் போல் பொறுமையாக இல்லாததால் வீமனை நம்மால் பழிக்கவும் இயலாது. துரியோதனனுக்காக நாம் அனைவரும் இரக்கப்படுவது போல வீமன் விலங்கியல்பும் பச்சைக் குருதியைக் குடிக்கும் இயல்பும் உள்ளவனாயினும், மாந்தரின் இயற்கையான உணர்வுநிலையில் நின்று பார்க்கும் போது வீமனுக்கு நாம் இரக்கம் காட்ட வேண்டியவராகிறோம்.

நெடுங்காலத்துக்கு முன்பு நடந்த கதையாயினும் இந்நிகழ்ச்சிகள் என்றும் வாழும் உயிர்ப்புள்ள சிக்கல்களாக நாடகத்தில் காட்டப்படுகின்றன. வீமன் துரியோதனனைத் தொடைமீது தாக்குவதற்குச் சில நிமிடங்களுக்கு முன், 'எலே! வீமா, பேடிப்பயலே நாங்கள் பாஞ்சாலியை எல்லோரும் அறிய அரசவையின் நடுவில் தரதரவென்று இழுத்து வந்த போது, உன் வீரம் எங்கே போயிருந்தது' என்று துரியோதனன் வீமனைச் சுருக்கெனக் கேட்டான். தொடைமீது வீமன் தாக்குவதற்கு ஒரு நொடிக்கு முன்பு தான் துரியோதனன் வெற்றிக்கு அறிகுறியாகத் தொடை தட்டி ஆரவாரித்தான். இங்கு, வீமனுக்குக் குறிப்பாகத் துரியோதனனின் தொடையைச் சுட்டிக் காட்டும் கண்ணனின் செய்கை இந்நாடகத்தில் உயர்வானதாகக் கருதப்படவில்லை. கண்ணனின் இச் செய்கை இங்குத் தேவையே இல்லை என்றும் கூறுவர். தீவினைக் கேற்ற தண்டனை கிடைத்தே தீருமன்றோ? துரியோதனன் எந்தத் தொடையை அவைக்களத்தில் துணிவிலக்கிப் பாஞ்சாலிக்குக் காட்டினானோ? எந்தத் தொடையைத் தட்டி வெற்றி ஆரவாரம் செய்தானோ அந்தத் தொடை இரண்டாக முறிந்தது. இவ்வாறு எடுத்துக் காட்டும் கூற்றுகள் எல்லாம் வீமனைப் பண்பாட்டின் பெட்டகம் என்று நிலைநாட்டுவதற்கன்று. நம்மிரக்கத்திற்குரியவன் வீமனா துரியோதனனா என்னும் வினா எழும்போது, வீமனுக்கே நாம் பரிந்துரைப்பவரா

கிறோம். விலங்கியல்புக்கு மாருன இயல்பும் இருவரிடத்திலும் காணப்படுகிறது. குறையும் நிறையும் கலந்த இருவரின் போட்டி இது.

நாடகத்தில் வீமனின் படைப்பு, நாம் முன் கூறியது போல், இரன்ன காப்பியத்தினும் ஒருபடி தாழ்ந்துள்ளது. இருப்பினும் கதைத் தலைவனை நாம் தேடவேண்டிய நிலைவரின் வீமனுக்கே அத் தகுதியை முதன்மையாகத் தரவேண்டியவராகிறோம். நாடகத்தின் முதற் காட்சியில் பாஞ்சாலியிடம் தன் சூளுரையை நிறைவேற்று வதாக வீமன் உறுதியளிக்கிருன். நாடகத்தின் இறுதிக் காட்சி, வீமன் தன் உறுதிமொழியை நிறைவேற்றுவதாக முடிகிறது. வீமனைக் கருத்தில் கொண்டே நாடகம் எழுதப்பட்டிருக்கிறது. வீமனை மைய மாகக் கொண்டே கதை நிகழ்ச்சி நடைபெறுகிறது. ஆதலால், துரியோதனன் வீமன் ஆகிய இருவருள் வீமனே கதைத் தலைவனு கும் தகுதிபெறுவதைப் பார்க்கிறோம்.

**அசுவத்தாமன்**

'அசுவத்தாமன்' என்னும் நாடகம் 1929-ஆம் ஆண்டு எழுதப் பட்டு அதே ஆண்டில் மைசூர் மன்னர் கல்லூரி கன்னட மன்றத் தாரால் நடிக்கப்பட்டது. முதன் முதலாகக் கிரேக்க நாடகம் ஒன்று கன்னட இலக்கிய உலகிலும் நாடக மேடையிலும் தலைகாட்டத் தொடங்கியது. நாடகத்தின் தொடக்கத்தில், இந் நாடக ஆசிரிய ரான கிரேக்கப் புலவர் சொபாக்கிளிசுக்குச் ஸ்ரீகண்டய்யா நன்றி செலுத்துவது காட்டப்படாமலிருந்தால், கிரேக்க நாடக இலக்கியத் தைப் பற்றி ஒன்றும் அறியாத மக்கள் அனைவரும் இதனை இந்தியர் ஒருவரால் எழுதப்பட்ட இந்திய நாடகமாகவே கருதியிருப்பர். நாடகத் தொடக்கத்தில் பாடப்படும் கூட்டுப்பாடலும் கைதேர்ந்த இந்திய நாடக ஆசிரியரின் கைவண்ணமாகவே இருந்தது. இந் நாடகம் வழக்கமான கன்னட நாடகப் போக்கிலிருந்து வேறுபட்டி ருந்ததால் கற்றவரிடையிலும் பல்கலைக்கழக மாணவரிடையிலும் புது மனக்கிளர்ச்சியை உண்டாக்கியது. இதனைக் குறித்துப் பல மாற்றுக் கருத்துகளும் கடுமையான திறனாய்வுகளும் வெளிவரத் தொடங்கின. இதனைப் பின்னர் காண்போம்.

ஸ்ரீகண்டய்யா ஒரு மொழி பெயர்ப்பு நாடகம் எழுதவேண்டும் என்று எண்ணியிருந்தால் சேக்சுபியரின் நாடகம் ஒன்றைத் தெரிந் தெடுத்திருப்பார். மேனாட்டு இலக்கியங்களைப் படித்ததனுல் தோன் றிய உள்ளுணர்வின் அடிப்படையில் புது நாடகத்தை உருவாக்க நினைத்தார். அந்நாடகம் வெறும் அழகு மட்டும் கருதிய அயல் நாட்டு இறக்குமதியாக இருக்கக் கூடாது என்றும் நினைத்தார். சேக்சுபியரின் நாடகங்களைப் போல் பொதுமை தழுவியதாய் இருப்ப

தோடு கிரேக்க நாடகங்கள் பல வகையில் இந்தியருக்கு நெருங்கியன வாயுள்ளன என்று அறிந்தார்.

பாரத சௌபதிக பருவத்தில் அசுவத்தாமன் பாஞ்சாலியின் பிள்ளைகளைக் கண்ணை மூடிக்கொண்டு வெட்டித் தள்ளுவதைப் போல, கிரேக்க இலக்கியத்தில் வரும் அயசு என்பவன் ஆடுமாடுகள் போன்ற வாயில்லா விலங்குகளை வெட்டிக் குவிப்பதால், கதை நிகழ்ச்சி ஒப்புமை கருதி அயசை மையமாக வைத்து நாடகம் எழுத நினைத்தார். அசுவத்தாமனுக்கும் அயசுக்குமிடையே காணப்படும் ஒப்புமை மேம்போக்கானது; மூடத்தனமானது என்றும் கூறலாம். இருப்பினும், பாரத சௌபதிக பருவத்தையும் கிரேக்கப் புலவர் சொபாக்கிளிசின் அயசு இலக்கியத்தையும் ஒன்ருக்கி ஓர் இரட்டை மூலக் கதையை நாடகமாக்கத் துணிந்தார்.

அவர் நெடுநாட்களாகக் கிரேக்க நாடகங்களைப் பயில்வதில் ஈடுபாடு கொண்டிருந்தார். புது நாடகம் எழுதுவதற்குத் தொடக்கத் துணையாகப் பாரதக் கதைச் சூழலைப் பின்னணியாக்கிக் கொண்டார். டாக்டர் டி.வி. குண்டப்பா அவர்கள் துரோணர், கருணன், சல்லியன் ஆகியோரையும் சௌபதிக பருவத்தையும் ஸ்ரீகண்டய்யாவின் நாடகத்தோடு ஒப்பிட்டபோது, ஸ்ரீகண்டய்யாவின் விளக்கிச் செல்லும் போக்கு நன்ருக இருப்பதாகக் கூறினர். புதிய சிந்தனைகளும், கதை நிகழ்ச்சிகளும், உரையாடல்களும் சில இடங்களில் வேறுபடுவது தேவையானதே என்ருர்.

ஒருவகையில், காட்சிக்குக் காட்சி உள்ளவாறே முழுமையாக உரையாடல்களிலும் ஒத்துச் செல்லுமளவுக்கு அயசைப் பின்பற்றி நாடகம் அமைத்திருக்கிருர். கூட்டுப் பாடல் கதைக் காட்சிகளை வகைப்படுத்திக் காட்டுவதும் ஒன்றுபோலவே இருக்கிறது. கிரேக்க நாடகத்தில் உள்ளவாறே கூட்டுப்பாடல் (Chorus), மூவகை இணைவுகள், நாடகமாந்தர் எண்ணிக்கை (இந்நாடகத்தில் ஓர் உறுப்பினர் குறைவு) ஆகியவை அசுவத்தாமன் நாடகத்திலும் ஒத்துள்ளன. இவற்றையெல்லாம் பார்க்கும் போது அசுவத்தாமன் நாடகம் ஏறத்தாழ வேற்று வடிவம் பெற்ற மொழிபெயர்ப்பு என்றும் கூறலாம்.

இந்தக் கருத்து உண்மையானதன்று. குறிப்பிடத்தக்க இடங்களில் கிரேக்க நாடகத்தை விட இது பல வகையில் வேறுபட்டிருக்கிறது. ஆங்காங்குச் சிறுசிறு சேர்ப்புகளும் நீக்கங்களும் செய்யப்பட்டிருப்பினும் அவை அயசு நாடகத்தினின்றும் இதனை வேறுபட்டதாகவே காட்டிவிடுகின்றன. கதைகளை ஒப்பிட்டுப்பார்த்தாலும் அசுவத்தாமனுக்கும் அயசுக்கும் உள்ள வேறுபாடுகளைத் தெளிவாகப்புரிந்து கொள்ளலாம்.

கிரேக்க நாடகத்தின்படி, அக்கிலசு என்பவனின் படைக்கலம், அக்கிலசுக்கு அடுத்த இடம் பெறத் தக்கவனும் கிரேக்க வீரருள் பெருவலிமை பெற்றவனுமான அயசுக்குத் தரப்படாமல் ஒதிசிய சுக்குத் தரப்படுகிறது. இந்நிகழ்ச்சி அயசுக்குக்கடுஞ்சினத்தை மூட்டிவிடுகிறது. தனக்குக் கிடைக்கவேண்டிய பரிசுப் பொருளைக் கிடைக்கவொட்டாமல் சூழ்ச்சி செய்த படைத்தலைவர்களை வெட்டிச் சாய்ப்பேன் என்று அயசு பொங்கியெழுகிருன். அதினி என்னும் தெய்வம் அவனைப் பித்தனுக மாற்றிவிடுகிறது. பித்தனுக மாறிய அயசு வழியில் எதிர்ப்பட்ட ஆட்டுமந்தைகளை எதிரிகளாகிய கிரேக்கப் படைத்தலைவர்கள் என நினைத்து வெட்டிச் சாய்க்கிருன். பித்தம் தெளிந்ததும் தன் செய்கைக்கு நாணுகிருன். தன் வீரத் திற்கு இழுக்கு நேர்ந்ததற்காகவும் அதினி தெய்வத்தின் தணியாச் சினத்தைத் தேடிக்கொண்டதற்காகவும் வருந்துகிருன். தெய்வத் தின் சினம் ஒரு நாள் தான் நீடித்தது. அயசின் ஒன்றுவிட்ட தம்பி யான தியூசர் என்பவன் கல்சசு என்னும் நிமித்திகன் வாயிலாக நடந்தவற்றைக் கேட்டறிந்து அண்ணனைக் காப்பாற்ற விரும்புகிருன். ஒரு தூதன் வாயிலாக, தான் வரும்வரை அயசின் அடிமை மனைவி தெக்மெசாவையும் அயசின் உடனுட்களான சலமனியன் கடலோடி களையும் மிகவும் விழிப்பாக அயசின் அருகில் பாதுகாப்பாக இருக்கு மாறு செய்திவிடுக்கிருன். ஆனுல், அயசு நண்பர்களின் கைக்குக் கிடைக்காமல் தப்பிச் சென்று தற்கொலை செய்துகொள்கிருன். கிரேக்கப் படைத்தலைவர்களான அகமெம்னனும் மெனிலசும் அயசை "காட்டிக்கொடுத்தவன்" என்று குற்றஞ் சாட்டி அவனுடலைப் பறவைகள் கொத்தித்தின்னுமாறு எடுத்தெறிய வேண்டும் என்று வலிந்துரைக்கின்றனர். ஆனுல் தியூசரும் பெருந்தன்மை நிறைந்த ஒதிசியசும் அதை எதிர்க்கின்றனர். பெருவீரனுக்குச் செய்யத்தக்க மதிப்போடு கூடிய சடங்குகளுடன் அயசின் உடல் நல்லடக்கம் செய்யப்படுகிறது.

பாரதத்தில் சௌபதிக பருவத்தின் கதை பின்வருமாறு: கௌர வர்களின் பெரும்படை மறவர்களுள் ஒருவனுன அசுவத்தாமன், பேரரசனுன துரியோதனன் போர்க்களத்தில் குருதி வெள்ளத்தின் நடுவில் வீழ்ந்து கிடப்பதைப் பார்க்கிருன். துரியோதனன் இன்னும் உயிரோடிருக்கிருன். பிணந்தின்னும் பேய்கள் அவனை வட்டமிட்ட வாறு உலவுகின்றன. இக்காட்சி அசுவத்தாமனின் நெஞ்சை உலுக்கி விடுகிறது. அசுவத்தாமனின் தந்தை நேர்மையற்ற முறை யில் கொல்லப்பட்டது போலவே துரியோதனனும் கொல்லப்பட்டிருப் பதை உணர்கிருன். பாண்டவர்களை அன்றே கொன்று தீர்ப்பதாக அசுவத்தாமன் துரியோதனன் முன்னிலையில் உறுதி மொழி ஏற்கிருன். துரியோதனன் அசுவத்தாமனைத் தானைத்தலைவனுக

அமர்த்துகிறன். அசுவத்தாமன் கிருபாச்சாரியாருடன் கிருதிவர் மனுடனும் சேர்ந்து திட்டயுத்மனனின் பாசறைக்குச் செல்கிறன். அங்கு தூங்கிக் கொண்டிருந்த அனைவரையும், பாஞ்சாலர் மற்றும் பாஞ்சாலியின் ஐந்து பிள்ளைகளையும் வெட்டித்தள்ளுகிறன். தூங்கு பவர் மீதும் கையில் படைக்கலம் இல்லாதவர் மீதும் தன்னை யெதிர்த்து நிற்காதவர் மீதும் போர்தொடுத்தலாகாது என்னும் வரை முறைகளையெல்லாம் அவன் கவனிப்பதாக இல்லை. கண்ணனும் பாண்டவர்களும் இக்கொடுஞ் செயலையறிந்து அசுவத்தாமனைப் பின் தொடர்கின்றனர். இரு சாரார்க்கும் நடக்கும் போரில் அசுவத் தாமன் ஏவிய கொடிய படைக்கலத்தைக் கண்ணன் வலியற்றதாக்கி அழித்து விடுகிறன். ஆளரவமற்ற வறண்ட பாலைவனத்தில் மூவா யிரம் ஆண்டுக்காலம் அலைந்து திரியுமாறு அசுவத்தாமனுக்குக் கண்ணன் சாவக்கேடு தருகிறன். அசுவத்தாமனின் நெற்றிச் சுட்டியில் விளங்கிய ஒளிபொருந்திய மணியைப் பாஞ்சாலிக்குத் தருகின்றனர்.

ஸ்ரீகண்டய்யாவின் நாடகத்தில் வரும் உறுப்பினர்கள்.

| கன்னட நாடகத்தில் உள்ளபடி | கிரேக்க நாடகத்தில் உள்ளபடி |
|---|---|
| 1. அசுவத்தாமன் (கதைத்தலைவன் | அயசு |
| 2. ஏகலைவனும் வேட்டைக் குழுவினரும் (அசுவத்தாமனின் நண்பர் குழாம்) | தியூசரும் அவன் குழுவினரும் (அயசின் நண்பர்கள்) |
| 3. உருத்திரசத்தி (அசுவத்தாமனின் மகன்) | யூரிசகெசு (அயசின் மகன்) |
| 4. பார்கவி (அசுவத்தாமனை வளர்த்தபாட்டி) | தெக்மெசா (அயசின் மனைவி) |
| 5. வீமன் (அசுவத்தாமனின் பகைவன்) | அகமெம்நன் மெனிலசு அயசின் பகைவர். |
| 6. கண்ணன் (சூழ்ச்சியாளன்) | ஒதிசியசு, அதினி சூழ்ச்சியாளர். |

அசுவத்தாமனும்[1] அவன் தந்தையும் கருநாடக மாநிலத்து வன வாசியிலிருந்து வடநாடு சென்று கௌரவர்களிடம் படைத்துறை சேவை புரிந்ததாகக் கூறப்படுகிறது. அசுவத்தாமனுடன் ஏகலைவனும் வனவாசியிலிருந்த வேடர் குழுவினரும் உடன் சென்றனர். சொபாக் கிளிசின் நாடகத்தில் தியூசரும் கடலோடிக் குழுவினரும் கூட்டுப் பாடல் பாடுவது போலவே ஏகலைவனின் குழுவினரும் கூட்டுப்பாடல்

1 பாரதக் கதையில் வரும் அசுவத்தாமனின் பெயர் 'அசுவத்தாம' என்று இருக்கும். இக் கிரேக்க நாடகத்தில் வருபவனை ஸ்ரீகண்டய்யா 'அசுவத்தாமன்' எனக்குறிப்பிடுகிறர்.

பாடுகின்றனர். பாரதத்தில் திருமணமாகாதவனுகக் காட்டப்படும் அசுவத்தாமன் இந்நாடகத்தில் திருமணமானவனுகவும் ஒரு மகனின் தந்தையாகவும் காட்டப்படுகிருன்.

அயசு நாடகத்தில் உள்ளது போலவே இந்நாடகத்திலும் கதை நிகழ்ச்சிகள் அமைந்துள்ளன. தெய்வத்தையும் மதியாத செருக்கோடு கூடிய தன்னெடுப்பு, பித்தேறிய நிலேயில் செய்யும் படுகொலேகள், பித்தம் அல்லது வெறித்தணிந்த நிலேயில் உண்மையுணர்வது, தெய்வம் மற்றும் நல்லோரின் நன்மதிப்பை இழந்துவிட்டதற்காக வருந்துவது, தற்கொலே செய்துகொள்வது, இறந்த உடலே எப்படி அடக்கம் செய்வது என்பது குறித்த கருத்து வேறுபாடுகள், இறந்தவனின் வீரத்திற்கு மதிப்பு காட்டிப் பெருமைபடுத்துவது ஆகியவை ஒப்புமைப்பகுதிகளாகும்.

ஸ்ரீகண்டய்யா சொபாக்கிளிசின் நாடக அமைப்பிலிருந்து இரண்டிடங்களில் மாறுபட்டிருக்கிருர். அயசு தன் படையைச் சேர்ந்தவர்களோடும் படைத்தலேவர்களோடும் போரிடுகிருன். கிரேக்கப் படைவீரர்கள் அயசைப் பெருவீரனுக மதிக்கின்றனர். அக்கிலசுக்கு அடுத்து அயசு ஒருவனே நிகரிலா வீரன் எனப் படுகிருன். தன்னேப்பாராட்டிய படைத்தலேவர்களேயே அயசு கொல்லத்துணிந்தான். அப்போது கிரேக்கப் படைகள் பகை நாட்டின் எல்லேயில் போரில் ஈடுபட்டிருந்தன. பெருவீரனுன அயசு தன் படைத்தளபதிகளே எதிர்த்து நின்ற செய்தி அவனேச்சார்ந்த அனேவர்க்கும் வியப்பையும் திகைப்பையும் பரபரப்பையும் உண்டாக்கியது. ஆனுல், அசுவத்தாமன் கதையில், அசுவத்தாமன் நெடுநாள் பகைவராகக் கருதப்பட்ட பாண்டவரை எதிர்க்கிருன். தன் தலேவன் துரியோதனன் பாண்டவரை அழிப்பதில் ஈடுபட்டிருப்பதை அறிகிருன். ஆதலால், அசுவத்தாமன் பாண்டவரைப் பகைத்துக் கொல்லத் துணிந்ததில் வியப்பு எதுவும் இல்லே.

இரண்டாம் வேறுபாடு முதல்வேறுபாட்டைச் சார்ந்த மனநிலே வேறுபாடாகும். தன் தகுதியைத்தன்னேச் சார்ந்தவர்களே மதிக்கவில்லே என்பதால் அயசின் உள்ளம் எரிமலேயாயிற்று. அக்கிளிசின் படைக்கலத்தை அயசுக்குப் பரிசளிக்காமல் ஒதிசியசுக்குத் தந்ததே இதற்குக் காரணமாயிற்று. கிரேக்கப் படைத்தலேவர்களேக் கொன்றழிக்கும் செயல் அயசின் மனப்புண்ணுக்கு மருந்தாகக் கருதப்பட்டது. கிரேக்கரிடையில் அத்தகைய பரிசுகளுக்குப் பெருமதிப்பிருந்தாலும் அந்தப் பரிசின் மதிப்பையும் அயசின் சீற்றத்தையும் ஸ்ரீகண்டய்யா இந்நாடகத்தில் சிறிது குறைத்தே காட்டியிருக்கிருர். இந்நாடகத்தில் அசுவத்தாமனின் சீற்றத்தைக் கிளறிவிடும் துயரக் காட்சி, போர்க்களத்தில் ஆதரவற்றுக்கவனிப்பாரின்றி குருதிப் புனலின் கிடக்கும் துரியோதனனின் உடலேயாகும். யாராலும்

வெல்லப்படாத தன் தந்தை துரோணரும் இதே வகையில் சூழ்ச்சியால் கொல்லப் பட்ட காட்சி அவன் கண் முன் வந்து நின்றது. தன் தந்தை கொல்லப்பட்ட வகை இரண்டாம் தூண்டுதலாக அமைந்தது. அன்பும் ஆதரவும் பொழிந்து தன்னைக் காத்த துரியோதனனுக்கு நேர்ந்த இறுதி, அசுவத்தாமனின் உள்ளத்தை உலுக்கிச் சீற்றங்கொள்ளச் செய்தது முதல் தூண்டுதலாயிற்று.

அயசுக்கு ஒதிசியசு நேரிடையான பகைவன்; வெற்றிக்கொடி நாட்டிக்கொண்ட போட்டியாளன். அசுவத்தாமனுக்குக் கண்ணன் குள்ள நரித்தந்திரங்களின் வாயிலாக பாரதக் கதையின் திசைமாற்றத்திற்கு வழி வகுத்து கௌரவர்களை அடியோடு அழித்த மறைமுகப் பகைவன். கதையின் போக்கையே மாற்றியமைக்கும் திறன் வாய்ந்தவனும் சூழ்ச்சித்திறனில் கைதேர்ந்தவனுமாகிய கண்ணனின் குணநலங்களை ஸ்ரீகண்டய்யா நன்கு உருவகப்படுத்தியிருக்கிறார். அசுவத்தாமன் கண்ணனை அறவே வெறுக்கின்ற காட்சி அறத்திற்குப் புறம்பான கண்ணனின் செய்கையைச் சுட்டிக் காட்டுவதற்கேயாகும்.

ஸ்ரீகண்டய்யா படைத்துள்ள அசுவத்தாமன் தெளிவுமிக்கவன் (இந்த உயர்வு அசுவத்தாமனுக்குச் செயற்கையாகப் புனையப்பட்டதன்று). மாபாரதத்தில் வரும் அசுவத்தாமன் பித்துற்ற மனநிலையில் அனைவரையும் கொல்கிறான். இந்நாடகத்தில் வரும் அசுவத்தாமன் இயல்பாகவே தெளிந்த மனநிலையோடு கொலை செய்கிறான். பாஞ்சாலர்களைக் கொல்லும்போது பாஞ்சாலியின் ஐந்து பிள்ளைகளையும் கொலை செய்து விடுகிறான். பிறகு தன் கொலை வெறிக்காக வருந்தும் பண்பட்டவனாகவும் இருக்கிறான். கொலை செய்யத் திட்டமிட்ட போதும், நண்பர் இருவர் தடுத்ததை மீறிய போதும் அவனுடைய பெருமிதமும் மனத்துணிவும் நம் கண் முன் நிற்கின்றன.

கிரேக்க நாடக உறுப்பினரின் இடத்தில் மாபாரதக்கதை உறுப்பினரைச் சேர்த்து நாடகம் உருவாக்கிய போது கதை நிகழ்ச்சிகளின் சூழலும் மாற்றம் பெற்றது. இம்மாற்றம் அருமையாகச் செய்யப்பட்டுள்ளது. கிரேக்க நாடகத்தின் உரையாடல்கள் அப்படியே எடுத்துக் கொள்ளப்படினும் ஆங்காங்குச் சில புது மெருகுகள் தரப்பட்டு, கேட்போரை ஈர்க்கும் வண்ணம் நாடக அமைப்புக்குச் சுவையூட்டுவதாகவும் கவிதை நயம் மிளிர்வதாகவும், நம் உள்ளத்தைத்தொடும் நாடகக் கூறுகளைக் கொண்டதாகவும் விரிவானதாகவும் அமைந்திருக்கிறது. நாடகம் தொடங்கும் போதே அத்தகைய சிறந்த நாடக இயல்புகளைக் காண முடிகிறது. கண்ணன் வினவுகிறான் :

"அசுவத்தாமனின் கொலைவாளைத் தடுத்தது எது? திசை மாற்றியது எது?"

அதற்கு உருத்திரன் மறுமொழி கூறுகிருன் :

"நான் சொல்கிறேன் கேள்! சூரியன் மேற்கில் மறைந்தது போல் கௌரவர்மரபும் மண்ணில் மறைந்து விட்டது. கௌரவர் தலைவனை துரியோதனன் அருகில் நீங்காநிழலாகவும் அன்பின் உறைவிடமாகவும் இருந்தவன் அசுவத்தாமன். துரியோதனனின் வீழ்ச்சியும் சாவும் விளைத்த மனக்குமுறல் அசுவத்தாமனின் உள்ளத்தில் எரிமலையாய் வெடித்தது. படுகளத்தில் வீழ்ந்த துரியோதனனின் கண்ணிமைகளை பணிவார்ந்த மதிப்போடு மூடிவிட்டு உள்ளத்தில் கொதிக்கும் சினத்தால் பற்களை நறநறவென்று கடித்தவாறு தன்னிருப்பிடத்திற்கு அசுவத்தாமன் செல்கிருன்.

வில்லைத் தூக்கியெறிந்து விட்டு உறையிலிருந்த இருவாய் கூர்வாளைக்கையில் ஏந்துகிருன். அனைவரும் அயர்ந்து உறங்கும் நட்டநடு இரவில் பாண்டவர்களின் பாசறைக்குள் நுழைந்தான். அவன் நுழைந்தவுடன் நான் அவன் எதிரில் போய் நின்றேன்.

வீரஞ் செறிந்த நண்பனே! இந்நள்ளிருளில் எங்கு வந்தாய்? இருட்டில் செய்யக் கூடிய போர் யாது? உனக்கு நன்மையுண்டாகும் வகையில் நான் என்ன உதவி செய்ய முடியும்? என நான் அவனை வினவினேன். 'பாண்டவர்களின் மரபை நானே அழிக்கப்போகிறேன்' என்ருன். சிலரைத்தவிர்த்தா? என்று வினவினேன். 'உருத்திரனே! நான் என்ன செய்கிறேன் என்று தொலைவில் நின்று பார்த்துக்கொண்டிரு. என்னுடைய வலிமையை நீ முழுமையாக அறியப்போகிருய் என்று கொடுமையின் அனல் பறக்கக் குலைநடுங்கச் சிரித்தான். நான் புன்முறுவல் செய்தவாறு அவனுக்கு மருட்சியூட்டினேன்.

நான் மருட்சியூட்டியதால் அவன் கண்கள் எதையும் சரியாகக் காணக் கூட வில்லை. அவன் மனதில் மயக்கமும் குழப்பமும் குடிகொண்டது. குழம்பிய மனநிலையிலிருந்த அவனை உங்கள் பாசறையினின்றும் வெளி வரச் செய்தேன். அவன் பாசறைக் கொட்டிலுக்குள் சென்ருன்.

சிறிது நேரத்தில் கொலையும் கூக்குரலும் பெருகியது. அசுவத்தாமன் கண்ணில் பட்டவர்களையெல்லாம் கொன்று குவித்துக் கொக்கரித்தான். எதிர்ப்பட்ட கால்நடைகளையும் கொன்ருன். பெண்களையும் செவிலியரின் கையிலிருந்த குழந்தைகளையும் துரத்திச் சென்று கொன்ருன். தன் வாளால் குத்தியபின் துண்டுதுண்டாக வெட்டினுன். கூடாரங்களைக் கிழித்தெறிந்தான்.

பெருந்தூக்கத்தில் கண்ணைத் தேய்த்துக் கொண்டு எழுந்தவர்களையும் இரக்கமின்றி வெட்டினான். நான் அருகிலிருந்தவாறு அவனுடைய வீரச்செயல்களைப் பாராட்டிக் கொண்டிருந்தேன். நான் புகழ்வதைக் கேட்டு மேலும் வெறிகொண்டவனாகிக் கொலைத் தாண்டவமாடினான்.

எதிரிலிருந்த ஒரு குதிரையின் கழுத்தை வெட்டியவாறு, " அடே, திட்டயுத்மனே ! நீ இப்படித் தானே உன் ஆசிரியரின் கழுத்தை வெட்டினாய், அதே சாவை உனக்குத் தந்தேன், தெரிந்து கொள் என்றான்.

அங்கிருந்த யானையொன்றைத் தரதரவென்று இழுத்து வந்து! அடே, பீமா ! இந்தக்காலால் தானே எங்கள் தலைவன் துரியோதனன் தலையை உதைத்தாய், அதைத்துண்டாடுறேன் பார்! என்று யானையின் கால்களை வெட்டினான். அந்த யானையைக் கொன்று காலால் எட்டி எட்டி உதைத்துப் பந்தாடினான்.

பாண்டவர்கள் அனைவரையும் கொன்றழித்து விட்ட நினைப்பில் கண்ணனையும் பழிவாங்க நினைத்தான். எதிரில் வந்த ஆட்டுக் குட்டியைக் கண்ணனாகி நினைத்து அதனைப் பற்றியெடுத்துக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு வெற்றிக் கூக்குரலிட்டான். ' அடே' கண்ணா ! குள்ளநரித் தந்திரக் காரனே ! போர் நெருப்பை மூட்டி விட்டவனே ! உன் தீவினையின் பயனை நீ அடைந்தே ஆக வேண்டும். நீ என் விருந்தாளி. உனக்குத் தகுந்த பரிசளிக்கிறேன் வா ' என்று கொக்கரிக்கிறான்."

சொபாக்கிளிசின் நாடகத்தை விட ஸ்ரீகண்டய்யாவின் நாடகத்தில் 420 வரிகள் குறைவாகவுள்ளன. ஆனால், கிரேக்க நாடகத்தில் அயசு பேசும் பேச்சை விட ஸ்ரீகண்டய்யாவின் நாடகத்தில் அசுவத்தாமன் பேசும் பேச்சு 11 வரிகளை மிகுதியாக கொண்டுள்ளது. காட்சியின் விளைவு நெறிப்படுத்தும் வகையால் உயர்ந்து நிற்கும் இடத்தில் மாற்றம் தெரிகிறது. அயசு படைத்தலைவர்கள் வரும் வழியில் நின்றிருந்தான். ஆனால், அசுவத்தாமன் துரியோதனனின் பிணத்தருகில் உட்கார்ந்து கவலையில் மூழ்கிக் கண்ணீர் சொரிகிறான் ; துரியோதனனின் கண்ணிமைகளை மூடுகிறான். கிரேக்க நாடகத்தில் கருத்தில்லாமல் இருட்படலம் காட்டப்படுகிறது. இந்நாடகத்தில் போர்க்களத்தில் இயற்கையாகக் கதிரவன் மேற்கில் மறைவதும் கௌரவர்களின் மரபு பூண்டோடு அதே நேரத்தில் அழிவதும் ஒருசேரக்காட்டப்படுகிறது. உருவகக் காட்சியில் மிடுக்கும் நிரடும் ஊடாடியிருப்பதன் காரணம் நாடகம் மிகுந்த விளக்கத்தை உள்ளடக்கிக் கொண்டிருப்பதேயாகும். கௌரவர் மரபு பூண்டோடு அழிவதும் சூரியன் மேற்கில் மறைவதும் ஆகிய

இரு கருத்துகள் ஒரே நிகழ்ச்சியாக இணைவது நாடக அமைப்புக்கு உயர்வு தருவதோடு கௌரவர்கள் பெற்றிருந்த செல்வாக்கையும் காட்டுகிறது. கௌரவர் தலைவனின் வீழ்ச்சி கௌரவ மரபின் வீழ்ச்சியாயிற்று.

மேலே காட்டிய அசுவத்தாமனின் உரையாடல்கள் நாடகச் சுவைக்கு மணிமுடி வைத்தாற்போல அமைந்திருக்கிறது. அசுவத் தாமனின் கொடுமனத்தை உள்ளபடியே வெளிப்படுத்திச் காட்டு கிறது. அசுவத்தாமனின் அடங்காச் சிரிப்பும் உருத்திரனின் புன்முறுவலும் முரணான இயல்பினவாக இருத்தலைக் காண்கிறோம். அவையோர்க்கு இது புதுமையாக இருக்கிறது. அசுவத்தாமனின் அடங்காச் சிரிப்பும் உருத்திரனின் புன்முறுவலும் ஸ்ரீகண்டய்யாவின் சொந்த கண்டுபிடிப்புகள். கிரேக்க நாடகத்தில் தெளிவின்றிப் பொதுவாக வரும் "Now this and now that commander as the fancy grew" என்னுங் குறிப்பை ஸ்ரீகண்டய்யா மேலும் தெளிவு படுத்தியிருக்கிறார். திட்டத்துய்ம்மனும் வீமனும் இங்கு வெளிப்படை யாகக் குறிப்பிடப்படுகின்றனர். துரோணரையும் துரியோதனனையும் கொன்றவர்களின் பெயரும் பிற கதைக் குறிப்புகளும் பாரதம் படித்த வர்களுக்கு ஏற்கெனவே தெரிந்திருப்பதால் இந்நாடகத்தின் கதைச் சூழல் இந்நாடகத்தைப் படிப்பவரின் உள்ளத்தில் அழியா ஓவியமாக நிற்கும். நான் இந்நாடகப் பகுதிகளை உரைநடைப் படுத்தித்தந் திருப்பது ஸ்ரீகண்டய்யாவின் உயர்ந்த கன்னட நடை, சொல்லாட்சி களின் அழகு, எளிமை, விழுமிய செய்யுள் நயம் ஆகியவற்றை முழுமையாகக் காட்டாது. சொபாக்கிளிசின் நாடகத்தில் அயசின் வீரமும் செருக்கும் முதலில் குறிப்பிடப்படுகிறது. அவற்றின் விளக்கம் தியூசரால் பிறகு சொல்லப்படுகிறது. அதினிதெய்வத்திற்குக் குறிப்பிடத்தக்கவாறு எந்தத் தீங்கும் அயசு செய்யவில்லை. அப்படி யிருந்தும், அவனுக்குக் குருட்டுத்தனமான மனப்போக்குகளை உண்டாக்கி அலைக்கழிக்கிறாள். அப்பொழுது அவன் சொல்கிறான் :

Pallas, in all things else have thou thy will.
But none shall wrest Odysseus from this doom.

அவன் ஏற்கெனவே சில காலம் மருட்சி கொண்டவனாக இருந்தான். கன்னட நாடகத்தில் உருத்திரன் தருவதாகச் சொன்ன வரத்தைப்பற்றி அசுவத்தாமன் அக்கறை கொள்ளவில்லை. (கிரேக்க நாடகத்தில் இதைப்பற்றிய குறிப்பு எதுவும் இல்லை.) மாறாக, அசுவத்தாமன் உருத்திரனுக்குத் தன் வலிமையின் பெருமையையும் வீரத்தின் திறத்தையும் காட்டுவதாகக் கூறுகிறான். தன்னுடைய ஆற்றல் கடவுளராலும் போற்றத்தக்கது என்கிறான். 'சிலரைத் தவிர்த்தா?' என்று உருத்திரன் கேட்பதைப் புறக்கணிக்கிறான். அதன்பிறகு அவன் பித்துற்றவனாகிறான். ஸ்ரீகண்டய்யா செய்துள்ள

மாற்றத்தின் விளைவாக உருத்திரனுக்கு எதிரான அசுவத்தாமனின் கொடுஞ்செயல்களும் பழிக்குப் பழியான பின்விளைவுகளும் அடுத்தடுத்து நிகழ்கின்றன. இருவர்க்கும் நேர்ந்த இடைக்காலத் தொடர்பு அழுத்தம் பெறுகிறது. சௌபதிக பருவத்தைத் தன் நாடகத்துக்கு இரட்டைக் காப்பிய மூலமாகத் தெரிந்தெடுத்ததன் வாயிலாக ஸ்ரீகண்டய்யாவுக்கு மற்றொரு நலனும் வாய்த்தது. அசுவத்தாமனின் கடுஞ்சினக் காட்சிகள், துரோணர் துரியோதனன் ஆகியோரின் சாவால் மட்டும் விளைந்தது என்பதை விட கௌரவர்களின் பேரரசு ஒரேயடியாக வீழ்ச்சியுற்றுத் தரைமட்டமானதைப் பின்னணியாகக் கொண்டுள்ளன. உலகமே நிலைகலங்கிப் போய் விட்டதாக அசுவத்தாமனுக்குத் தோன்றியது என்றும் கூறுவர். அக்கிலசின் படைக்கலம் அயசுக்குப் பரிசாகத் தரப்படாதது அயசின் கடுஞ்சினத்தைத் தூண்டுவதற்கு நல்ல வலுவான காரணமாக அமையவில்லை.

சொபாக்கிளிசின் நாடகத்தில் அதினி கொடுந்தெய்வமாகக் காணப்படுகிறாள். கிரேக்க தேவதைகள் ஒருவர் பக்கம் சாய்ந்து மற்றவருக்குத் தீங்கு விளைவிக்கும் இயல்பினவாதலின் அதினித் தெய்வம் ஒதிசியசுக்கு நன்மையும் அயசுக்குத் தீமையும் செய்பவளாக இருக்கிறாள். 'எதிரியின் வீழ்ச்சியைக் கண்டு விலாப் புடைக்கச் சிரிப்பது இனிமையானது' (Laughter is sweetest over a foe) என்று அதினி கூறுவது ஒரு தெய்வத்தின் நாவால் சொல்லத் தகுந்த கூற்று அன்று. ஏய்க்கப்பட்டவனும் இரங்கத்தக்கவனுமான அயசைப் பார்த்து, 'தெய்வங்களின் வலிமை பெரிது, ஒதிசியசு!' என்று வெற்றிப் பெருமிதத்துடன் கூறுமிடத்திலும் அதினியை நம்மால் பெரிதாக மதிக்க முடியவில்லை. எனினும்,

What man than Aias more provident
Or who for timeliest action more approved?

என்னும் வரிகள் இரக்கவுணர்ச்சியை மேலிடச் செய்கின்றன. மன நிறைவும் இரக்கவுணர்வும் இந்நாடகத்தில் ததும்பி நிற்கின்றன. இந்நாடகத்தில், எதிரியின் வீழ்ச்சியைக் கண்டு சிரிப்பது இனிமையானது என்று உருத்திரன் சொல்லும்போது அத்தகைய மகிழ்ச்சி விரும்பத்தக்கதன்று என்று கண்ணன் அவனைப் பழிக்கிறான். அதினியைவிட உருத்திரன் எவ்வகையிலும் மேம்பட்டவன் அல்லன். ஒருவகையில் அதினியை விட உருத்திரன் சிறிது தாழ்ந்தவன் என்றே கூறலாம். உருத்திரன் தன் பகைவனுக்குப் பல கெடுதிகள் நேர்வதைக் கண்டு மகிழ்கிறான்.

தெக்மெசா அயசுடன் பாசறையில் வாழ்ந்திருப்பதில் புதுமை எதுவும் இல்லை. ஆனால், குருக்சேத்திரப் போர்க்களச் சூழ்நிலையில்

அடிமை மரபில் பிறந்த பெண்ணொருத்தி அசுவத்தாமனுடன் இருக்க வாய்ப்பில்லை. அதனுற்ருன், கிரேக்க நாடகத்துக்கு இணையான பெண் உறுப்பினராக இந்நாடகத்தில் பார்கவி அசுவத்தாமனின் பாட்டியாகப் படைக்கப்பட்டிருக்கிருள். இப்படைப்பு மாபாரதக் கதைக்கு எவ்வகையிலும் குறைவுண்டாக்காது. துன்பங்களில் துணைநிற்பதிலும் இரகசியம் காப்பதிலும் இவள் தெக்மெசாவைப் போன்றே செயற்படுகிருள். கிரேக்க நாடகத்தில் வரும் தியூசருக்கு இணையாக ஏகலைவன் அசுவத்தாமனுக்குத் தோழனுகப் படைக்கப் பட்டிருக்கிருன். அசுவத்தாமனுக்கு உடன்பிறந்த தம்பியில்லாத குறையை ஏகலைவன் நிரப்புகிருன்.

ஒருவகையில் அயசு சித்தரிக்கப்பட்டிருக்கும் முறை குறித்துக் கடுமையான தடைகள் எழுப்பப்படுகின்றன. 'தியூசர் உயர்வு நவிற்சியாகப் பாடும் பன்னிரண்டு அடி பாராட்டுப் பாடல் தொடர அயசின் சாவுக்காட்சி முடிவு பெறக் கூடாதா? அயசை எவ் வகையில் நல்லடக்கம் செய்வது என்பது குறித்த பூசல் மிகையான தன்ருே? என்பன அத்தடைகளாகும். கிரேக்கரின் பழைய மரபின் படி, சொபாக்கிளிசு ஏற்கெனவே பாதிப்பித்தனை அயசை, தன் துன்பியல் நாடகத்திற்குக் கதைத் தலைவனுக்கினுன். வலிமையிலும் வீரத்திலும் அக்கிலசுக்கு அடுத்தவனுகக் கருதப்பட்ட அயசு சீயசின் மகன் என்பது கிரேக்கத் தொல்கதை. ஏதன்சு மக்கள் இவனுக்கு விழாக்கொண்டாடினர்; தம் குடிவழித் தலைவனுகவும் கருதினர். இவன் பெருமையை சொபாக்கிளிசு தன் நாடகத்தில் நன்கு வலியுறுத்தி அவையினரின் உள்ளத்தில் நிலைகொள்ளச் செய்கிருன்.

மக்களால் விழாக்கொண்டாடிப் போற்றப்பட்ட இவ்வீரன், வாயில்லா விலங்குகளைக் கொன்று குவித்தான் என்னும் குற்றச் சாட்டுக்கு உள்ளாகித் தற்கொலை செய்து கொண்டான். இந்நிகழ்ச்சி அவனைப் போற்றும் மக்களின் மனத்தில் அவனுக்கிருந்த மதிப்பைக் குறைத்துக் காட்டக் கூடும். அயசுக்கு நேர்ந்த இழிவைப் போக்கி மீண்டும் பழைய பெருமையில் நிலைநிறுத்த வேண்டுவது சொபாக்கிளிசின் கடமையாயிற்று. அயசின் நாடகத்தை ஒரு தகுதி மீட்பு நாடகம் எனலாம். வீரனுக்குக் கல்லறை அமைப்பது கிரேக்க நாட்டு வீரவழிபாட்டின் சிறப்புக் கூருகும். அதன்படி, கல்லறை அமைத்துப் பெருமைப் படுத்துவதும் ஈமச்சடங்குகளை முறையாகச் செய்வதும் இன்றியமையாதது. இறந்தபின் நல்லடக்கம் செய்து கல்லறையமைக்கும் காட்சி, கிரேக்கரின் மரபும் பண்பாடும் அறியாத மற்றவர்க்கு மிகையானதாகவும் தேவைப்படாததாகவும் காணப் படினும் இக்காட்சி மிகவும் தேவையானதே. இந்த இறுதிக் காட்சி இருநோக்கங்களுக்காகச் சேர்க்கப்பட்டுள்ளது. ஒன்று, அவை

யோர்க்குக் கதைத் தலைவனின் வீரத்தையும் பெருமையையும் நினைவூட்டுவது. இரண்டாவது கதைத்தலைவனின் தகுதிக்குரிய சடங்குகள் முறையாகச் செய்யப்பட்டன என்பது. இறுதிக்காட்சியின் அமைப்புக்கு இவ்வாறு காரணம் கூறப்பட்டாலும், திறனாய்வு நோக்கில் பார்க்கும்போது இக்காட்சி வலுவானது அன்று என்கின்றனர். உயிர்ப்பிரியுமுன் அயசு பேசுகின்ற உரையாடல், எழிலார்ந்த இயற்கை உணர்வின் வெளிப்பாடாகவும் ஆழ்ந்த அமைதியோடு கூடியதாகவும் உள்ளது. இதற்கு நேர்மாறாக, கடுந்தாக்குதலாகவும் குத்தலாகவும் அமைந்துள்ள பின் உரையாடல்கள் தகுதிவாய்ந்தனவாகவோ நாடகத்துக்கு உயர்வு சேர்ப்பனவாகவோ இல்லை. சில அழகுணர்வுகள் இருப்பினும் நாடகக்கட்டுக் கோப்புக்காக இந்நாடகக் கதையின் நீட்சி பயன் பட்டிருக்கிறது என்று சொல்லலாம்.

அசுவத்தாமன் நாடகத்திலும் இறுதிக் காட்சியின் நீட்சி இக் கருத்தை உட்கொண்டிருக்கிறது. அசுவத்தாமனுக்குக் கோயில் கட்டி விழா நடத்துவது பற்றிய குறிப்பும் இறுதிக் காட்சியில் உள்ளது. இந்தியச் சூழலில் விழா நடத்துவது தகுதியுடைய தாயினும், மாபாரதக் கதைத்தலைவர்கள் எல்லாரையும் விடுத்து அசுவத்தாமனுக்கு மட்டும் கோயில் கட்டுவது புதுமையாகத் தெரி கிறது. அசுவத்தாமன் இறந்த பின் அவன் உடலை நல்லடக்கம் செய்வது தொடர்பான சிக்கலும் தலையெடுக்கிறது. வீமன் அசுவத் தாமனை இகழ்ந்துரைப்பதும் அதற்கு மறுமொழியாக ஏகலைவன் அசுவத்தாமனைப் பெருமைப்படுத்திப் பேசுவதும் குறிப்பிடத்தக்கது. இக்காட்சி ஸ்ரீகண்டய்யாவுக்கு முழு மனநிறைவைத் தரவில்லை. சொபாக்கிளிசின் நாடகத்தில் இக் காட்சி, முழு நாடகத்தில் நான்கி லொரு பகுதிக்கும் அதிகமாக 372 வரிகளைக் கொண்டிருக்கிறது. ஒருவர்க்கொருவர் பேசும் எதிருரைகள் 220 வரிகளாக நீள்கிறது. அசுவத்தாமனில் இறுதிக் காட்சி முழுவதும் 186 வரிகளுக்குள் அடக்கப்பட்டிருக்கிறது. வீமனுக்கும் ஏகலைவனுக்கும் இடையில் நிகழும் ஏச்சுரைகளும் எதிருரைகளும் 37 வரிகளுக்குள் அடக்கப் படுகின்றன. ஏச்சுரைகளும் எதிருரைகளும் இத்துணைச் சுருக்கமாக முடிக்கப்பட்டிருப்பது வரவேற்கத்தக்கதாகும். போரால் விளையும் தீமைகளும் அமைதியாக வாழ்வதன் பெருமைகளும் அழகாக விளக் கப்பட்டுள்ளன. இறந்த வீரனைப் பாராட்டும் பெருமைக்குரியவ னாகக் கண்ணன் காட்டப்படுகிறான். அயசில் உள்ளதைவிட மிகவும் உள்ளங்கவரும் வகையில் தகுதி மீட்சி (பெருமையை வற் புறுத்திக் கூறுதல்) இங்கும் உள்ளது. அறமே மிகுதியாக வலியுறுத் தப்படுகிறது. போர், வன்செயல், வெகுளி ஆகியவற்றைக் கண்டிக் கும் நோக்கில் கூட்டுப்பாடல் அமைந்துள்ளது.

'ஓ கொடும் போரே! நீ பூண்டோடு
அழிவது எப்போது?
அமைதி என்னும் தாயே! நீ எங்களை
நீங்காதிருப்பது எப்போது!'

போருக்கு முதன் முதல் வித்திட்ட கொடுந் தீவினையாளனைக் கூட்டுப்பாடல் பழிக்கிறது. பாரத காலம்வரை போருக்கு வித்திட்ட கொடுமனத்தவர்கள் செய்து வந்துள்ள கொடுமைகளுக்குச் சான்றாக மகாபாரதம் விளங்குகிறது. கிரேக்கப் பழங்கதைகளில் திராகன் என்னும் கொடிய விலங்கின் பல் விதைக்கப்படுவது, இனி விளையப் போகும் தீங்குகளுக்கு முன்னோடியாகக் கருதப்படுவது இங்கு ஒப்பிடத்தக்கது.

கூட்டுப்பாடலில் பாஞ்சாலியின் பிறப்பு கூறப்படுகிறது. அவள் தீயில் பிறந்தவள் எனப்படுகிறாள். பல ஆண்டுகளுக்கு முன்பு தரையில் வழுக்கி விழுந்த துரியோதனனைப் பார்த்து பாஞ்சாலி எள்ளி நகையாடினாள். பழிக்குப் பழி வாங்கும் பொருட்டு, துரியோதனன் பாஞ்சாலியை அரசவைக்கு இழுத்துவரச் செய்து அவமானப்படுத்தி எள்ளி நகையாடினான். துரியோதனன் பாஞ்சாலிக்குத் தன் தொடை மீதிருந்த துணியை விலக்கிக் காட்டி அவமானப்படுத்தியதற்காக, வீமன் துரியோதனனின் தொடையைத் தாக்கி முறித்துக் கொன்றான். துரியோதனன் பாஞ்சாலியின் கூந்தலைப் பிடித்து இழுத்து வரச் செய்ததால், வீமன் துரியோதனனின் தலையைக் காலால் உதைத்து உருட்டிப் பழிவாங்கினான். இந்நிகழ்ச்சி அசுவத்தாமனுக்குச் சினமூட்டியதால், வீமனையும் பாண்டவர்களையும் பழி வாங்குவதற்காக அசுவத்தாமன் பொங்கிப் புகைந்து செய்யும் கொடுஞ் செயல்கள் இந் நாடகத்தில் காட்டப்படுகின்றன. பழைய தீவினைகள் புதிய தீவினைகளைச் செய்யத் தூண்டுகின்றன.

'தீவினை தீவினையைத் தூண்டும்' என்னும் ஸ்ரீகண்டய்யாவின் கருத்து கூட்டுப்பாடலில் புதிதாகச் சேர்க்கப்பட்டுள்ளது. இப்பாடல், கண்ணனை 'எந்தையே! எங்களுக்கு அமைதியைக் கற்பிப்பாயாக' என்று வரவேற்பு வாயிலாக வேண்டுகோள் விடுத்துப் புகழ்கிறது. இப்பாடல் அடுத்து வரும் கண்ணனின் உயர்ந்த அறவுரைக்குத் தோற்றுவாயாக அமைந்திருக்கிறது.

"அது உருத்திரன் எண்ணம்,
நான் சொல்வதைக் கேளுங்கள்!
உங்கள் நெஞ்சத்தைக்
கல்லாக்கிக் கொள்ளாதீர்கள்
இறந்த வீரனுக்குரிய ஈமச்சடங்குகளை
முறையாகச் செய்ய மறுக்காதீர்கள்.

உங்கள் வெறுப்பு எவ்வளவு பெரிதானாலும்
வெறுப்பு அறத்தை அழிக்காதிருக்கட்டும்."

அசுவத்தாமனைப் பழிக்குப் பழி வாங்காவிட்டால், பாண்டவர்கள் பெற்ற வெற்றி உண்மையில் வெற்றியாகாது என்று வீமன் நினைக்கிறான். அப்பொழுது வீமனை நோக்கிக் கண்ணன் கூறுகிறான். (இது கிரேக்க நாடகத்தில் ஒதிசியசு கூறுவதை ஒத்திருக்கிறது).

"உன் நண்பனை மன்னிப்பது வெற்றி
உன் நண்பனுக்குப் பணிந்து போவதே வெற்றி
பழிவாங்கும் எண்ணத்தை, தீய உணர்வுகளை, சினத்தை
முழுமையாக வெல்வதே வெற்றி
அறத்தினின்றும் அணுவளவும் பிறழாத
மனவுறுதியே மாபெரும் வெற்றி."

ஆதலால், அசுவத்தாமனை வெல்வதை விட அறத்தை நிலை நாட்டுவது நல்லது என்று கண்ணன் கூறுகிறான். 'எதிரியின் வீழ்ச்சியைக் கண்டு சிரிப்பது இன்பமானது' என்னும் உருத்திரனையும் கண்ணன் இடித்துரைக்கிறான். அசுவத்தாமனைப் பாசறைக்குள் நுழைய விட்டது உருத்திரனின் தவறு என்று வீமன் உருத்திரன் மீது குற்றஞ் சாட்டிய போது கண்ணன் கூறத் தொடங்கினான்.

"பாசறைக்குள் வரவிட்டானா?
நம்பிக்கை மிகுதியால் அப்படி விட்டிருப்பான்
அறத்திற்கு மாறாக அசுவத்தாமன் இப்படி
கொடுஞ்செயல் புரிவான் என்று யாருக்குத் தெரியும்?
அசுவத்தாமனுக்குத் தீவினை செய்யும் வாய்ப்பைக்
கொடுத்து அவனைத் தூய்மைப்படுத்தியிருக்கிறான்
உருத்திரன்."

நாடகமாந்தரின் பண்பு நலன்களை மேலும் சிறிது ஆய்வதோடு இக்காட்சியை முடித்துக் கொள்ளலாம். அசுவத்தாமனைப் பற்றி முன்பே சில செய்திகள் கூறப்பட்டுள்ளன. கிரேக்க நாடகத்தில் அக்கிலசு என்னும் பெருவீரனுக்கு அடுத்தாற் போல் கருதத்தக்க வலிமை சான்றவன் அயசு என்பதை ஏற்கெனவே நாம் அறிவோம். அயசின் உடல் வலிமையை நோக்கும் போது கௌரவர் படையில் நிற்கும் அசுவத்தாமன் ஒருபடித் தாழ்ந்தவனே. அசுவத்தாமன் பெரிய வீரர்களுள் ஒருவனாகக் கருதப்பட்டாலும், கௌரவர்களின் படைத்தலைவர் வரிசையில் அசுவத்தாமனின் இடம் என்ன என்று ஆராய்ந்தால், அசுவத்தாமன் பொதுவகையான வீரர்களுள் சிறந்தவன் என்று மட்டுந்தான் கூறமுடியும். வீடுமன், துரோணர், கருணன் போன்ற மாபெரும் வீரர்கள் அனைவரும் இறந்தபின், அசுவத்தாமன் இறுதிநாள் போருக்குத் தானைத்தலைவனாக அமர்த்

தப்படுகிருன். துரியோதனனின் சாவுக்கு முன்பு, துரியோதனனின் உயிருள்ளவரை போர் நீண்டு கொண்டிருக்கிறது என்பதைக் காட்டும் கண்துடைப்பாக இது காணப்படுகிறதேயன்றி வேறன்று. ஏனெனில், அசுவத்தாமன் படைத்தலைவஞக அமர்த்தப்பட்டாலும் அவன் பின்ஞல் நிற்கப் படைகளே இல்லை. துரியோதனனின் படைகள் முழுதும் அழிந்து விட்டன. இறுதி நாள் போரில் தானைத் தலைவஞக நிற்கும் அசுவத்தாமனுக்கு, அயசுக்குரிய வீரம், பெருமை ஆகியவற்றை வலியப்புகுத்தி ஸ்ரீகண்டய்யாதான் நாடகத்தில் அசுவத்தாமனை மிகுதியாக உயர்த்திக் காட்டியிருக்கிருர். உருத்திரனைப் போன்ற அழிக்கும் படைப்பாக அசுவத்தாமனை நம்முன் கொணர்ந்து நிறுத்துகிருர். அசுவத்தாமன், அழிக்கும் கடவுளான உருத்திரனின் தோற்றவராகவே (அவதாரம்) பலவிடங்களிலும் செயற்படக் காண்கிருேம்.

அசுவத்தாமன் ஒரு பெருவீரனுக்குரிய பெருமித உணர்வை மாபாரதக் கதையிலிருந்தும் கிரேக்க நாடகத்தில் வரும் அயசிடமிருந்தும் பெறுகிருன். பண்பு நலன்களை ஒப்பிட்டுப் பார்த்தாலும் அயசை விட அசுவத்தாமன் உயர்ந்தவன். பாரதத்தில் வரும் அசுவத்தாமனை விட இந்நாடகத்தில் வரும் அசுவத்தாமன், வெறியுற்ற நிலையில் மட்டும் தீவினை செய்வதால் உயர்ந்து நிற்கிருன். சொபாக்கிளிசின் கிரேக்க நாடகத்தின் தொடக்க காட்சிகளில் அஞ்சத்தக்க விலங்கியல்பு கொண்டவஞக அயசு காட்டப்படுகிருன். பார்கவியிடம் அசுவத்தாமன் பேசும் முறையில் இவ்வியல்புக் கூறுகள் வெளிப்படுகின்றன. பார்கவி அசுவத்தாமனுக்குப் பாட்டியாகக் கருதப்படுபவள்; வாழ்வில் பல துன்பங்களை ஏற்றவள்; தாயில்லாத குழந்தையாக இருந்த அசுவத்தாமனை அன்பு பொழிந்து ஆதரவு காட்டி வளர்த்தவள். செவிலித் தாயாக இருந்து வளர்த்த அவளை அசுவத்தாமன் அன்புடனும் மதிப்புடனும் நடத்துவான் என்று எதிர்பார்ப்பது இயல்பே. அசுவத்தாமன் அவளிடம் எப்பொழுதும் அன்பு காட்டி வந்தான். ஒருமுறை 'அவள் எங்கள் வீட்டுத் தெய்வம்' என்று குறிப்பிடுகிருன். உருத்திர சத்தியை வாழ்த்தும் போது 'நீ அவள் முன்னிலையில் விலை மதிக்கத்தக்க மாணிக்கமாக வாழவேண்டும்' என்று கூறுகிருன். இவை இந்திய மரபுக்கு எடுத்துக் காட்டாகவுள்ளன. ஆஞல், ஒருமுறை செவிலித் தாய் என்றும் பாராது அசுவத்தாமன் பார்கவியை கொடுஞ்சொற்களால் கடிந்துரைக்கிருன். 'பெண்கள் வாயை மூடிக்கொண்டிருப்பதுதான் தகுதி' என்று அவன் கூறும் சொற்கள் பார்கவிக்கு அதிர்ச்சி மருத்துவமாக இருந்தது. மற்ருெரு முறை பார்கவியை முன்னிலைப் படுத்திப் பேசவும் விரும்பாமல், 'அவள் நாம் சொல்

வதைக் கேட்டுப் பணிந்து நடப்பாள்' என்று படர்க்கையில் வைத்துப் பேசுவதைக் கூட்டுப்பாடலில் கேட்கிறோம்.

அசுவத்தாமனுக்கு நேர்ந்த துன்பங்களின் படிப்பினையாக அவனுக்கு மெய்ப் பொருளுணர்வும் வாழ்வியல் தெளிவும் ஏற்பட்டதாகச் சொல்ல முடியாது. இதனால் நாடகநோக்கம் நல்ல விளைவை எதிர்நோக்கியதாக இல்லையென்று கூறலாகாது. அடுத்தடுத்து வந்த துன்பங்களால் அவன் மெய்யுணர்வு பெற்றான் என்று காட்டுவது ஸ்ரீகண்டய்யாவின் நோக்கமன்று. வாயில்லா விலங்குகளையும் பச்சிளங்குழந்தைகளையும் மகளிரையும் கொன்று குவித்ததனால் அவனுக்கு நேர்ந்த அவமானத்தை அவனால் தாங்கிக் கொள்ளமுடியவில்லை. தன்னைப் 'பாவி' என்று ஓரிருமுறை அழைத்துக்கொள்கிறான். தான் செய்த தீவினைகளுக்காகவும் செய்ய நினைத்த கொடுமைகளுக்காகவும் அவன் நாணியதைவிட உலகம் தன்னை எவ்வாறு பழிக்குமோ என்று அதிகமாக உள்ளுக்குள் வருந்தினான். அவனுடைய இறுதிப் பேச்சிலும் கழிவிரக்கம் காணப்படவில்லை. தீவினைகளின் தாக்குதல் பாண்டவர்களைச் சாரக்கூடாது. தெய்வங்களின் சீற்றமும் அவர்களைத் தாக்கலாகாது என வேண்டுகிறான். இப்புதிய சூழலை ஆராய்ந்து பார்த்தால் அசுவத்தாமன் மண்ணுலகத்தவராலும் தெய்வங்களாலும் மதிக்கத் தக்கவனாக மாறிவிட்டான் என்று தெரிகிறது.

தன் சொந்த ஊரான வனவாசிக்குச் சென்றால் மக்கள் முகத்தில் விழிக்க முடியாதே என அஞ்சுகிறான். அதனாற்றான், தற்கொலை செய்து கொள்ள விரும்புகிறான். தன் தீவினைகளுக்குத் தானே தண்டனை ஏற்க நினைக்கிறான். பாண்டவரோடு போர் செய்து இறக்க அவன் நினைக்கவில்லை. போரிட்டு மடிவதனால் பாண்டவர்க்கு மற்றொருமுறை வெற்றி வாய்ப்பைத்தர வேண்டிவரும் என்று எண்ணினான். விண்ணுலகில் தன் தந்தையின் கண்முன், தன் பெருமையை நிலைநாட்டத்தக்க ஏதேனும் ஒரு வீரச்செயலை அல்லது நற்பணியைச் செய்ய விரும்பினான். அதனைத்தன் தந்தைக்குச் செலுத்தும் நன்றிக் கடனாகவும் நினைவில் நிலைக்கத்தக்க நல்லுணர்வின் அடையாளமாகவும் நினைத்தான். அதனால், தற்கொலை செய்து கொள்ளும் முடிவைத் தயக்கமின்றி ஏற்கிறான்.

இந்நாடகம் அரங்கேறிய ஒருசில மாதங்களுக்குப்பின், இதனைக் குறித்து நிலவிய மாறுபட்ட கருத்துக்களையும் இங்கு குறிப்பிடுவது பொருந்தும். இந்திய மரபுப்படி பாரதக் கதையில் வரும் அசுவத்தாமன் என்றும் அழிவில்லாத அமரன். ஸ்ரீகண்டய்யா இந்நாடகத்தில் அவனைக் கொன்றது தவறு என்று எதிர்தரப்பினர் குறை கூறினர். அசுவத்தாமனுக்குச் சாவு நேர்ந்ததே தவறான

நிலையில் அவன் தற்கொலை செய்து கொள்வதாகக் காட்டியிருப்பது பெருந்தவறு என்றனர். ஆசிரியர் யார் என்று தெரியாத இடைச் செருகல் பாடல் ஒன்றை அடிப்படையாக வைத்துக் கொண்டு ஸ்ரீகண்டய்யாவின் எதிரிகள், அசுவத்தாமனுக்கு அமரத்தன்மை உண்டு என வலிந்துரைப்பது பொருந்தாது. அசுவத்தாமனை அமரன் என்று கூறத்தக்க செய்யுட்பகுதி எதுவும் பாரதத்தில் இல்லை. அப்படியிருந்திருந்தால் அவனுடைய தந்தை துரோணருக்குத் தெரிந்திருக்க வேண்டுமன்றோ? 'அசுவத்தாமன் இறந்தான்' என்று போர்க்களத்தில் தருமர் கூறிய கூற்றைத் துரோணர் அப்படியே நம்புவதைப் பார்க்கிறோம். மாபாரதத்தில் வரும் அசுவத்தாமன் அத்துணை உயர்ந்தவன் அல்லன். தன் நாடகத்தில் வரும் அசுவத்தாமனை ஸ்ரீகண்டய்யா நாடகப்பாங்கிற் கேற்ப உயர்வாகப் படைத்துக் காட்டியிருக்கிறாரே ஒழிய குறைவு படுத்தவில்லை.

தற்கொலை செய்து கொள்வதைப் பலர் குறை கூறுகின்றனர். தற்கொலை என்னும் சொல் அதன் உண்மைப் பொருளிழந்து அருவருப்பான எண்ணத்தை மக்களிடையில் உண்டாக்கியிருக்கிறது. ஓர் உயர்ந்த குறிக்கோளை அடைவதற்காகத் தன்னுயிரையும் கொடுப்பது இயல்பான காட்சி; போற்றத்தக்கமாட்சி. இதனை உயிர்க்கொடை (உயிர்த்தியாகம்) என்று உயர்வுபடுத்திக் கூறுவர். உயிர்க்கொடையை இந்தியமரபு போற்றி வரவேற்கிறது. 'அசுவத்தாமன் உயிர் விட்டதனால் என்ன பெரிய செயற்கரிய செயலைச் செய்து முடித்தான், அல்லது எந்தக்குறிக்கோளை எய்தினான்' என வினவக்கூடும். தற்கொலை செய்து கொண்டதனால் அவன் பெற்ற வெற்றி என்னவென்றால், உலகத்தவரின் வெறுப்பையும் இகழ்ச்சியையும் காணாதிருப்பதேயாகும். தான் செய்த தீவினைக்காக வருந்தி அல்லது வெட்கப்பட்டு உயிர் விட்டிருந்தால் அது அவனை மேலும் உயர்த்திக்காட்டியிருக்கும். நான் முன்பு கூறியதுபோல் இதுவே அவன் சாவுக்கு அடிப்படையாக இருக்கவில்லை. அசுவத்தாமன் இறந்தது சரியா என்னும் வினாவை எவரும் எழுப்பவில்லை. அவனுடைய சாவுக்குச் சரியான காரணம் இருக்க வேண்டும் என்று தான் சொல்கிறோம். அந்தக் காரணமும் பாரதக் கதையைத் தழுவியதாக இருக்க வேண்டுமேயன்றி கலைத்திறனுக்காகச் சேர்ப்பதாக இருத்தலாகாது.

இறுதி நேரம் வரை அசுவத்தாமன் உலகியல் உண்மைகளைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. கண்ணனைக் குறித்த அவனுடைய மதிப்பீடும் தவறுகிறது. எதுஎப்படியிருப்பினும், துன்பியல் கதைத் தலைவனுக்குரிய இயல்புகளை வெளிப்படுத்தி நம் மதிப்பையும் பரிவையும் அசுவத்தாமன் பெற்று விடுகிறான். அவனுடைய நண்பரும்

பகைவரும் ஒருசேர அவனுடைய வீரம், வலிமை, போருக்கம் ஆகியவற்றைப் பாராட்டுகின்றனர். அவனுக்குத் தீங்கு நினைக்கும் தெய்வமான உருத்திரனும் கூட, 'வீரத்திலும் அறிவுடைமையிலும் அசுவத்தாமனுக்கு நிகர் யார் உள்ளனர்' என்று வினவுகிறுன். 'அசுவத்தாமனுக்கு நிகரானவர் யார் என்று என்னுலும் கூற முடியாது' என்று கண்ணனும் மறுமொழியளிக்கிறுன். அசுவத்தாமனின் பெருமையும் புகழும் இந்நாடகத்தில் கொடிகட்டிப் பறக்கின்றன. அவனுடைய விடாப்பிடியே அவனுக்குப் பெருமை சேர்க்கிறது. உருத்திரனேடு சமமாக நின்று பேசுமளவுக்கு மாந்தரினும் மேலான உயர்வுடையவனுகிறுன்.

தன் இளமகன் கையில் வில்லேந்தி அம்பு தொடுக்கும் திறம் கண்டு மெய்ம்மறந்து முறுவலிக்கும் அசுவத்தாமனைக் காணும் போது அம்மாவீரனின் வீரம் நம் மனக் கண்ணில் நிற்கிறது. தன் மகன் மீது அளவில்லாத அன்புபொழியும் தந்தையான அசுவத்தாமன், போர்க்களத்தில் வெறிபிடித்தவனுக மாருமலிருந்தால் பச்சிளங்குழந்தைகளையும் மகளிரையும் கொன்றிருக்க மாட்டான். பாண்டவர்களை அழிக்க வேண்டும் என்று ஆத்திரப்படும் நிலையிலும் அவனுடைய இறுதிப் பேச்சும் தெய்வ வழிபாட்டுப் பாடலும் நம் நெஞ்சைத் தொடுகின்றன.

அவனுடைய வழிபாட்டில், தான் இறந்த பின் தன்னுடைய நண்பர்கள் முதலில் காணச் செய்ய வேண்டும் என்று உருத்திரனிடம் வேண்டுகிறுன். இதன் வாயிலாக அவனுடைய அன்புணர்வை நாம் பாராட்ட வேண்டியவராகிறேம். சூரியனையும் குறிப்பாகக் கன்னட நாட்டையும் பற்றி அவன் கூறுவன கவிதை நயம் சொட்டும் தேம்பூங்கட்டியாக இனிக்கின்றன. ஒவ்வொரு எழுத்தும் தாய்நாட்டுப் பற்ருல் மெருகேறி ஒளிவீசுகின்றன. இறுதி நேரம் நெருங்க நெருங்க, கன்னட நாட்டு மேலைக் கடற்கரையோரத் தென்னந் தோப்புகளின் நிழலினிமையும், தென்னங்கீற்றுகளின் சலசலப்பும், பட்டாடை விரித்தது போன்ற பனிநீர் ஏரிகளும், பசும்புல் வெளியிடைப் பாய்ந்தோடும் ஓடைகளும் அவன் நினைவில் பசுமையாக நிழலாடுகின்றன. ஓர் இனந்தெரியாத் தன்னிரக்கம் அவன் இதயத்தை நெருக்கினுலும் அத்துயரத்தை மாற்றி, தனக்கு முன் இறந்து மறுவுலகத்தில் தன்னை எதிர் நோக்கியிருக்கும் துரோணர், கருணன் போன்ற பெருமக்களைக் காணவிருக்கிறேம் என்னும் இன்ப நினைவால் ஆறுதலடைகிறுன்.

வீமன் பழிக்குப் பழிவாங்கும் பொதுவகை மாந்தனுகவும் முரடனுகவும் படைக்கப்பட்டிருக்கிறுன். பார்கவியைப் பற்றி முன்பே சில செய்திகள் கூறப்பட்டுள்ளன. மாபாரதத்தில் வரும்

கண்ணனை தெய்வத்தின் மறுபிறப்பாகக் கருதினாலும் கருதலாம், கருதாமலும் விட்டு விடலாம். ஆனால், கண்ணனின் படைப்பு முழுக்க முழுக்க தெய்வத்தன்மை பொருந்தியது என்பதை ஐயுற முடியாது. ஸ்ரீகண்டய்யா இந்நாடகத்தில் கண்ணனைக் கடவுளாக உயர்த்தாமல் பொதுவகை மாந்தனாகவே படைத்திருக்கிறார். கிரேக்கரின் சமய நம்பிக்கை போலல்லாமல், மத அடிப்படையில் இந்தியர் அனைவராலும் கண்ணன் கடவுளின் மறுபிறவியாகக் கருதப்பட்டு வருகிறான். இக்கருத்தை மக்களிடமிருந்து மாற்ற முடியாது. ஆதலால் இந்நாடகத்தில் கண்ணன் பொதுவகை மாந்தருள் ஒருவனாக வருவது, நம்மை வியப்பிலாழ்த்தி நம்ப முடியாமல் செய்து விடுகிறது. இதைவிட, ஸ்ரீகண்டய்யா இந்நாடகத்தில் கண்ணனுக்கு வேறு பெயரையாவது சூட்டியிருக்கலாம் என்று எண்ணுகிறோம். ஸ்ரீகண்டய்யாவின் நோக்கிலேயே நாமும் கண்ணனைப் பார்த்தால் நம் மதிப்பையும், குறைவிலாப் போற்றுதலையும் கொள்ளை கொண்டு விடுகிறான். தேவனாகக் கூறப்படும் உருத்திரனைவிட மாந்தனாகக் கூறப்படும் கண்ணனிடம் மிகுந்த தெய்வத்தன்மையை நாம் காணுமாறு ஸ்ரீகண்டய்யா செய்து விடுகிறார்.

பகைவனின் வீழ்ச்சி இன்பந்தரும் என்று உருத்திரன் கூறுகிறான். பிறருக்குத் துன்பம் நேர்வது கண்டு மகிழ்வதைக் கண்ணன் விரும்புவதில்லை. அசுவத்தாமனைக் கண்ணன் வெறுப்பதுமில்லை; பகைப்பதுமில்லை. கண்ணன் ஏகலைவனை அழைத்து அசுவத்தாமனருகிலேயே அன்று முழுவதும் உடனிருந்து நன்கு காக்குமாறு கூறுகிறான். ஆதரவற்ற உலகில் துன்பத்தின் பிடியில் சிக்கிய மாந்தனுக்குக் கண்ணன் காட்டும் இரக்கம் அவனுடைய தெய்வத்தன்மையை வெளிப்படுத்திக் காட்டுகிறது.

'என்ன வாழ்க்கை இது !
மாந்தனின் வாழ்வு ஒரு காற்றுக்குமிழ்
நிற்பதும் நடப்பதும் வெறும் நிழலே
நாளை நடப்பதை எவர் அறிவார்?'

உலகில் பிறந்த ஒவ்வொருவரும் துன்பப்பட்டே ஆக வேண்டும் என்னும் பொது நெறியை இது எடுத்துக்காட்டுகிறது. இன்று அவன் துன்புறுவதைப் பார்க்கிறேன். நாளை அதே துன்பத்தை நானும் படவேண்டியிருக்கும். வெற்றியைப் பற்றி அவன் தரும் விளக்கம் வேத மெய்ப்பொருளாகவும் குன்றின் மேலிட்ட விளக்காகவும் ஒளிர்கிறது.

'மன்னிப்பதே வெற்றி
வெகுளியை வெல்வதே வெற்றி

அறத்திலிருந்து அணுவளவும்
பிறழாத உறுதியே வெற்றி'

நாடக அமைப்பிலும் உரையாடல் சிறப்பிலும் அசுவத்தாமன் நாடகம் மாபெரும் வெற்றியடைந்துவிட்டது. இதனைப் புதுக் கன்னடத்தில் எழுதாமல், மிகக் கருத்தாக ஆராய்ந்து முடிவெடுத்து, பழங்கன்னடத்தில் எழுதியிருக்கிருர். கதைக் கோப்புக்கும் கால இடைவெளியை மனத்தால் எட்டி நோக்கும் இயல்பான சூழலுக்கும் பழங்கன்னடமே மிகவும் ஏற்புடையதாக இருப்பது நமக்கும் புலனுகிறது. இந்நாடகத்தைப் புதுக் கன்னடத்தில் எழுத அவர் முயன்றிருக்க வேண்டும் என்று சிலர் வலிந்துரைப்பர். அவர் நினைத்திருந்தால் புதுக் கன்னடத்திலும் அவரால் எழுத முடியும். இந்நாடக வாயிலாகப் பழங் கன்னடத்தின் முழு அழகையும் வெளிப்படுத்திக் காட்டும் முயற்சியில் அவர் வெற்றியடைந்தபின் புதுக் கன்னடத்தில் எழுதியிருக்கலாமே என்று கூறுவதில் பொருளில்லை. பழங் கன்னடத்தில் எழுதும் முயற்சி தோல்வியுற்றிருந்தாலல்லவா புதுக் கன்னடத்தில் எழுதியிருக்கலாம் என்று மற்றவர் அறிவுரை கூறியிருக்க முடியும். மொழிநடையில் பழங்கன்னடம் சிறந்ததா புதுக்கன்னடம் சிறந்ததா என்று பேசுவோர் ஒருபுறமிருந்தாலும் இந்நாடகத்தில் பாடல் இனிமையைக் கேட்டு மகிழ்ச்சியில் திளைக்காதவர் எவருமிலர். ஸ்ரீகண்டய்யாவின் பாடல்களுள் சிலவற்றை எடுத்துக் காட்டாகக் கூறவேண்டுமாயின், வனவாசியின் இயற்கையழகைக் கூறும் கூட்டுப்பாடல் (11.488 ff), 'களிப்பே களிப்பே கங்கு கரையிலா களிப்பே' என்று தொடங்கும் பாடல் (11.545 ff) ஆகியவற்றை மிகச் சிறந்தனவாகக் குறிப்பிடலாம். இரண்டாவதாகக் குறிப்பிட்ட பாடல் அசுவத்தாமனின் களிப்பு மிகுந்த வாழ்வுக்குக் கைக்காட்டி மரம் போல் காணப்படினும், அதுவே சாவுக்கும் வழி காட்டி நிற்கும் துயரங்கவ்விய நாடக இரட்டுறலாக (Dramatic irony) அமைந்திருப்பதைக் குறிப்பிடாமலிருக்க முடியாது.

கன்னட இலக்கிய வரலாற்றில் அசுவத்தாமன் நாடகம் அமர வாழ்வு பெற்று நிலைத்து விட்டது. இந்தியப் பண்பாட்டையும் மேனுட்டுப் பண்பாட்டையும் ஒன்ருய்ப் பிணைத்துப் புதியகலைவடிவம் தரும் ஸ்ரீகண்டய்யாவின் நெஞ்சுகந்த ஆசை கீழைமேலை நாடுகளின் கலைநலன் தழுவியதாக அமைந்துள்ளது. ஸ்ரீகண்டய்யாவின் மற்றெல்லா படைப்பு நூல்களையும் விட இந்நாடகம் ஒன்றில்தான் கீழைமேலை நாடுகளின் கலைநலன்களைப் பிணைத்தும் இணைத்தும் காட்டி, கலையுள்ளங்களைக் கவினுற அணைத்துக் கொண்டிருக்கிருர்.

பகுதி நான்கு

# 4. பாரசிகர், பொன்கனவுகள், பிறசிறு நூல்கள்

**பாரசிகர்**

அசுக்கிளிசின் Persae என்னும் நாடகத்தின் கன்னட வடிவமான 'பாரசிகர்' 1935-இல் வெளிவந்தது. அறம் ஒன்றே பாரசீகப் பேரரசைக் காப்பாற்றியது என்னும் கருத்தை ஆணித்தரமாக வலியுறுத்துவதற்காகச் சிலவரிகளைக் கூடுதலாக நாடகத்தினிறுதியில் சேர்ந்திருப்பதைத் தவிர்த்து மற்ற வகையில் மூல நூலைத் தழுவியே, வடிவம் தந்திருக்கிருர். ஸ்ரீகண்டய்யாவின் கன்னட ஆக்கம் மிகச் சிறப்பாக அமைந்துவிட்டதால் அசுக்கிளிசின் மூலநூல் நயத்தில் குறைவுடையதாயிருக்கிறது என்பர். அசுக்கிளிசின் மூலநூல் முதலிலிருந்து இறுதிவரை ஒரே அழுகுரலாகவும் ஈமவிளரியாகவும் காதுகளில் ஒலிக்கிறது. கன்னட ஆக்கமும் மூலநூலின் குறைபாடான முழு அவலச் சுவையைக் காட்டுகிறது. எனினும், இந்நாடகம் மேடையில் வெற்றி பெறவில்லை.

பாரசீகரைத் தோற்கடித்த கிரேக்கரின் வெற்றியைக் குறித்த இந்நாடகம் உண்மையில் வெற்றிப் பாடலாக இல்லாமலிருப்பதே என் கருத்தைப் பெரிதும் கவர்ந்தது என்று ஸ்ரீகண்டய்யா ஒருமுறை கூறினர். இந்நாடகம் தோற்றுப் போனவர்களின் நோக்கில் வெற்றி பெற்றவனைப் பார்க்கிறது என்பதே இதற்குரிய தனிச் சிறப்பாகும்.

**பொற்கனவுகள்** (ஹொஙகனசுகளு)

ஸ்ரீகண்டய்யா பல சமயங்களில் எழுதிய பாடல்களின் தொகுப்பே 'பொற்கனவுகள்' என்னும் நூல். தன் வாழ்நாளில் முப்பதாண்டுகளாகச் சிதைந்தும் சிதறியும் கிடந்த பட்டறிவின் (அனுபவம்) திரட்சி இது. இந்தியாவைப் பற்றிய—குறிப்பாகக் கருநாடக மாநிலத்தைப் பற்றிய எதிர்காலக் கனவுகள், என்ருே ஒருநாள் ஒன்றுபட்ட கருநாடகம் மைசூர் மன்னரின் ஆட்சியின் கீழ்வரும் என்னும் நம்பிக்கை, மைசூர் மன்னர் மரபின் மீது வைத்த அன்பு ஆகியவை அவருள்ளத்தில் கவிதை நீரூற்றுக்களாய்ப் பீறிட்டன. யாப்பு, நடை, கற்பனை, உளப்பாங்கு ஆகியவை

தன்னியல்பில் இயற்கை வெளிப்பாடாக அமைந்துள்ளன. இவர் முதன்முதல் எழுதிய பாடல் இத்தொகுதியில் முதற்பாடலாகச் சேர்க்கப்பட்டுள்ளது. இது இன்றைய புதுமைப் பாங்கினைத் தழுவியதாயினும் பழைய பாடல்களில் மட்டும் காணப்படும் எதுகை யமையப் பாடப்பட்டுள்ளது. இத்தொகுதியினிறுதியில் இருபாடல் களுக்கு முந்திய 'தர்மயுத்த' என்னும் பாட்டை, பழமையின் சின்னமான சத்பதி என்னும் ஆறடிப் பாடல் வகையில் எதுகை யமையப் பாடியிருக்கிறார். இது 1943-இல் எழுதப்பட்டது. தான் புதுக்கவிதைத் துறையில் விடுதலை விரும்பியாக இருந்தாலும் மரபு வழிக் கவிதைக்குப் பகைவனாக இருக்கவேண்டியதில்லை என்பதைத் திறனாய்வாளருக்கு எடுத்துக் காட்டுவது போல் இவை அமைந் துள்ளன.

" இந்தியத்தாயே ஓ! இந்தியத்தாயே !
என்றுநீ மீண்டும் விழித்தெழப் போகிறாய்! "

இத்தொகுப்பின் முதற்பாடல், 'இந்தியா தன்மீது படிந்துள்ள மாசுகளை நீக்கிக் கொள்ளுமா' என்று தொடங்குகிறது. இந்தியாவில் காணப்படும் புதுமையான முரண்பாடுகளையும் குறிப்பிடுகிறார்.

'அறியாமை இருளை அகற்றியவர்கள்
அறிவு ஒளி காட்டினர்
நம் நோய்களைக்குணப்படுத்தியவர்கள்
நலமான வாழ்வுதந்தனர்'

இத்தகு நல்லவர்களே நம் புறக்கண்களை மறைத்து, முன்னேற் றத்தைத் தடுத்து நம் அழிவுக்கும் வழிவகுத்த துண்டு. இந்தியப் பண் பாட்டின் மீது நமக்குள்ள பற்றும் பெருமையும், நம்மைப் புத்துலக வாழ்வியல் அறிவியல் நலங்களைக் காணாதவாறு தடைப்படுத்து கின்றன என்னும் கருத்து ஸ்ரீகண்டய்யாவின் உள்ளத்தில் ஆழப் பதிந்திருந்ததாகத் தெரிகிறது.

'உள்ளத்தில் உண்மையின் ஒளிபரவிய போது
அவ்வெளிச்சத்தில் உண்மை காணத் தவறிவிட்டீர்கள்
ஒளிபடாமல் முகந்திருப்பிக் கொண்டீர்கள்
பழம் பெருமை பேசியவாறு
அறியாமைக் குகையில் அடைக்கலம் புகுந்தீர்கள்
குலப்பெருமையும் குறுகிய எண்ணமும்
உங்களைக் குருடாக்கி விட்டன'

இந்தியத்தாய் தன்மக்களை நோக்கிக் கூறும் குற்றச்சாட்டுகள் இவை. இந்தியாவின் மீது வலியமோதிய படையெடுப்புக்களையும், இந்தியத் தாய் தன் மக்களை வீறுபெறச் செய்து எதிர்ப்புக்களை முறி யடித்ததையும் ஸ்ரீகண்டய்யா விளக்குகிறார்.

'நெடுங்கடல் அரசி நெருங்கிய தோழி
இங்கிலாந்துத் தங்கையின் உதவி நாடினேன்
இந்தியா ஒரே நாடானது
இந்தியர் நாம் எனும் நேயம் கிளர்ந்தது
பேர்பெற சீருற இந்தியா வளர்ந்தது.'

இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்குமுள்ள நட்புறவு குறித்த அவருடைய கருத்தை இப்பாடல் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்குகிறது. ஸ்ரீகண்டய்யாவின் உள்ளப்பாங்குக்கு ஒரு எடுத்துக் காட்டாகவும் இலங்குகிறது. இன்றைய நிலையில் இதனைப் படிப்பவர்கள், உண்மையாகவே இங்கிலாந்து இந்தியாவிடம் அன்புணர்வைப் பெருக்கியிருந்ததா என வியக்கக்கூடும். விடுதலைப் போராட்ட காலத்தில் இங்கிலாந்து இந்தியாவை வெறுத்தது என்பது உண்மையே. ஆயினும், அழிக்க நினைத்தவற்றினும் இந்தியாவுக்கு ஆங்கிலேயர் செய்துள்ள ஆக்கப்பணிகளே மிகுதி என்பது சிந்தித்துப் பார்ப்பவர்க்குத் தெளிவாகப்புலப்படும். இங்கிலாந்தின் ஆட்சியால் இந்தியா குறிப்பிடத்தக்க சில நன்மைகளைப் பெற்றது என்பதும், இதையுணர்ந்தே ஸ்ரீகண்டய்யா இந்தியா, இங்கிலாந்து ஆகிய இரு நாடுகளிடமும் உள்ளார்ந்த அன்பு செலுத்தினர் என்பதும் நாம் ஒப்புக்கொள்ளத் தக்க இரு உண்மைகளாகும்.

மைசூர் மன்னரின் குடும்பத்தைப் பற்றிய நான்கு பாடல்களுள் கிருட்டிண ராச (கிருஷ்ண ராஜ உடையாரின்) அரசரின் வெள்ளி விழாவைக் குறித்த பாடல் மிகச் சிறந்த இசைப்பாடலாகக் கருதப் படுகிறது. கன்னடக் கவிதையுலகில் முதன்முதல் இப்பாடலின் வாயிலாக இசைப்பாடல் வகையை ஸ்ரீகண்டய்யா புகுத்தினர். மாநில அளவில் கொண்டாடப்படும் விழாக்களில் இசைத்துக் காட்டப்படும் இத்தகைய இசைப்பாடல்கள் விழாவுக்கு இனிமை கூட்டுவனவாக அமைந்தன. இசைப்பாடல் எழுதுவதில் எழும் தடைகளை மீறி, ஸ்ரீகண்டய்யா வெற்றி பெற்றுர். இசைப்பாடலின் தாளத்துக்கும் சந்தத்துக்கும் ஆற்றெழுக்கான சொல்லடைவுக்கும் ஏற்ப, யாப்புஅமைப்பை எளிமையாகத் தெரிந்தெடுத்துக் கொள்ளும் திறமை அவருக்கு இயல்பாகவே அமைந்திருந்தது.

'அலைதவழ்ந்து முத்தமிடும் அழகான மேலைக் கடற்கரை, ஓடி வரும் ஓடைகளை உடுத்திருக்கும் மலைச்சாரல், பாலருவி பெருக்கெடுத் தாற் போன்ற தெள்ளிய ஆறுகள், வாழ்வுதரும் தண்ணீர் வற்றுத வாய்க்கால்கள், பசுமை குலுங்கும் வயல்கள் என, இயற்கையன்னை தன்னைப் பல்வேறு அழகுகளால் ஒப்பனை செய்துகொண்டு அரசரின் வெள்ளிவிழாவின்போது தானும் பங்குபெற்றுள்' என்று சுவைபடக் கூறுகிருர்.

மைசூர் மன்னர் கிருட்டிணராசர் மிகவும் பெரியவர், அறிஞர், பொறுமை வாய்ந்தவர், கலை இலக்கியப் புரவலர், முன்னேற்றப்படிகளில் நின்றவாறே பழமையிலும் நல்லவற்றை விடாது காக்கும் பண்பாளர், அமைச்சர்களைத் தெரிந்தெடுப்பதில் தனித்திறனுள்ளவர்; எல்லாவற்றினும் மேலாக, மக்களின் குரலுக்கு அஞ்சாமலும் புறக்கணிப்பின்றியும் செவிசாய்க்கும் விழிப்புணர்வினர். இது இன்றைய மறுமலர்ச்சி எண்ணமுள்ள அனைவருக்கும் தெரிந்த செய்தியாகும். ஸ்ரீகண்டய்யா அரசரிடம் கொண்டிருந்த மதிப்பும் கடப்பாட்டுணர்வும் நாம் ஒருகால் ஏற்காவிடினும், அரசர்க்கு அவரளித்த பாராட்டுரைகளைப் பொருளற்றன அல்லது தகுதியற்றவர்க்குத் தரப்பட்டவை என்று கூறமுடியாது.

'வான்கொண்ட கிருட்டிணன்' (Ban Konda Krishnan) என்பது கிருட்டிணராச மன்னரின் மறைவு குறித்த இரங்கற்பா. பழங் கன்னட இலக்கியத்தில் இரங்கற்பாவுக்குரிய கருத்துகள் காணப்படினும் இரங்கற்பா தனிவகைப் பாட்டிலக்கியமாகக் கன்னடத்தில் அதுவரை மலரவில்லை. இரங்கற்பா வகையைக் கன்னடவுலகிற்கு அறிமுகப்படுத்திய பெருமை ஸ்ரீகண்டய்யாவைச் சாரும். ஆங்கில மொழியிலுள்ள இரங்கற்பாவின் கூறுகளான தேவதைகளுக்குச் செலுத்தும் வழிபாடு, இறந்தவரைக் குறித்த இரங்கல், இயற்கையின் வருத்தம், மனநிலை மாற்றம், பூதவுடம்பு மறைந்தாலும் புகழுடம்பு மறையவில்லையென்னுந் தெளிவு, இறுதித்தேற்றம் ஆகிய அனைத்தும் இங்கும் இடம் பெற்றுள்ளன. முழுமையான கவிதை நோக்கினும் சந்த அமைப்பு, நடையழகு, உணர்ச்சி வெளிப்பாடு ஆகியவை, சிறப்பாக அமைந்திருப்பதால், கிருட்டிணராச மன்னரின் உயர்வையும் பெருமையையும் தெளிவாக எடுத்துக்காட்டி நம்மை ஒப்புக் கொள்ளச் செய்கின்றன. 'கன்னடத்தாயின் பார்வை' (கன்னட தாய நோட்ட) என்னும் பாடல் விசய நகரப்பேரரசின் ஆரும் நூற்ருண்டு நிறைவுநாள் நினைவாக இயற்றப்பட்டது. நாட்டுப் பற்றுப்பாடல்கள் சில சமயங்களில் வெறுஞ்சொல்மாலைகளாகவும் ஆரவாரப் பாடல்களாகவும் அமைந்துவிடுவதுண்டு. இதற்கு மாருகச் ஸ்ரீகண்டய்யாவின் பாடல் உண்மையான நாட்டுப்பற்றை நன்கு விளக்கும் நயஞ்சொட்டும் பாடலாயிற்று.

கருநாடக மண்ணின் பெருமைகளைக்
கேட்கக்கேட்கக் காது குளிர்ந்தது.
திருத்தலம் காணச் செல்லும் அடியார்களைப் போல்
தாய்நாடுமுழுதும் கால்நடையாய்ச்
சுற்றிவரச் சுற்றிவர-என் கண்கள் குளிர்ந்தன
கன்னடத்தாயின் திருவடிப் புழுதியைத்
தலையால் தாங்கி நடந்தேன்

இந்நாடு பொன்னுடு, பேரெழில் குலுங்கும் நாடு
பொலிவெலாம் திரண்டநாடு
அன்பின் ஊற்று என்னுடு
நாட்டினழகைப் பருகிப் பெருமையுணர்வை உண்டு
பசியாறினேன் ; நெஞ்சில் சுரந்தது
களிப்புப்பாட்டு; காலில் தழைத்தது கோலக் கூத்து.

இப்பாடலைப் படிப்போர் சொல்லுக்குச் சொல் நேர்பொருள் கொள்ளக் கூடும். அவர் கூத்தாடினுரோ இல்லையோ ! அவர் பாடினுர் என்பது மட்டும் உண்மை. கருநாடகம் என்னும் தாய் நிலத்தின் பெயர் விளக்கம் குறித்து ஸ்ரீகண்டய்யா ஆய்ந்தார். கரிய மண்ணையுடைய நாடு என்று இச்சொல் பொருள்படுகிறது. கருநாடக மாநிலத்தில் பெரும்பகுதி நிலம் கரிசல் மண்ணுக இருப்பது அனைவரும் அறிந்த ஒன்ருகும். கீழே வயல்களும் மேலே கார்மேகங்களும் கருமையாக உள்ளன. கன்னட மகளிரின் கருநெடுங்கூந்தலும் கரு விழிகளும் இருள் நிறத்தன வாயுள்ளன. இதற்கு நேர்மாருக நீர் வீழ்ச்சியின் வெண்ணுரைகளும், கடலலைகளின் வெண்ணுரைகளும் வெளுத்துக் காணப்படுகின்றன. இத்துணை வளமான நாட்டில் கருநாடகத்தாய் (கன்னடத்தாய்) முன்னேற்றம் தடைப்பட்டு வாடி வருந்தி நிற்கிருள். கன்னடத் தாய்க்கு நல்ல காலம் வரத்தொடங்கு கிறது. இந்தியாவின் மூத்த மகளான கன்னடத்தாய் இப்பொழுது புகழாடை பூண்டு வெற்றியுலா வந்து கொண்டிருக்கிருள்.

'கன்னடக் கொடி' (கன்னட பாவுட்ட) என்னும் பாடல் கன்னட நாட்டுக் காளையரும் கன்னியரும் கன்னடக் கொடி பிடித்து முன்னேற அழைக்கிறது. கன்னடம், கன்னடியர் என்ருலே என்ன வென்று தெரியாத காலத்தில் கன்னடியரை விரைந்து செயல்படத் தூண்டி கிளர்ச்சியூட்டும் திருப்பள்ளியெழுச்சியாகவும், உறங்கிக் கிடந்தவர்க்கு ஊக்கமும் கிளர்ச்சியும் ஊட்டிய வீர முழக்கமாகவும் இப்பாடல் விளங்கியது. இப்பாடலில் அணிநலமும் சொல்லழகும் விரவியுள்ளது ; உள்ளம் கவரும் கவிதை நயம் ஆழ்ந்துள்ளது.

'வெள்ளிப்பா' (சுக்கிரகீதெ) என்னும் பாடல் இத்தொகுதியில் மிகவும் அழகான பாடல் எனப்படுகிறது. இது மைசூர் பல்கலைக்கழகத்தின் வெள்ளிவிழாவின் போது பாடப்பட்டதாகும். இது கொண்டான்மார்க்கு அடங்கிய அடிமைத்தனத்தையோ வெறும் அரசியல் பற்றையோ குறிப்பதன்று ; கொழுந்துவிட்டெரியும் கன்னடநாட்டுப்பற்றைக் கூட இப்பாடல் கடந்து செல்கிறது. அறி வுடைமை, வாய்மை அறியாமைக்கும் அறிவுடைமைக்கும் உண்மைக் கும் பொய்க்கும் கடவுளுக்கும் அரக்கர்க்கும் இடையே நடக்கும் ஓயாப்போர் ஆகியவையே ஸ்ரீகண்டய்யாவின் கவனத்தை இப்

பாடலில் ஈர்க்கின்றன. ஆசிரியருக்கும் மாணவருக்கும் பொதுவான ஓம் 'ஸஹநாவவது' (Om, Sahanavavatu) என்னும் பழங்கால வாழ்த்துப்பாடலுடன் தொடங்குகிறார்.

நாங்கள் காக்கப்படுக புரக்கப்படுக
வலிவுடன் நாம் ஒன்று கூடி உழைப்போமாக
எங்களுக்குக் கல்வியும் மெய்ஞ்ஞானமும் நல்கப்படட்டும்
எங்களிடையில் வெறுப்பு தோன்ருதிருக்குமாக.

அவர் மேலும்பாடுகிருர்:

தொடக்கத்தில் சொன்னபடி
ஒளி கேட்கப்பட்டது; ஒளி தரப்பட்டது
ஒளி பொலிவுடன் விளங்கியது
ஒளிப்பொறிகள் நாலாத்திசையும் பரவின
வானத்துக் கோள்கள் மின்னின
கதிரவனும் திங்களும் உலகவுயிர்களின்
கண்களும் ஒளிபெற்றன
வாய்மையும் நேர்மையும் மன்னிப்பும் அருளும்
மண்ணில் அழகுபெற்றன.

பச்சைப்பட்டாடை யணிந்த நிலமகள் கடவுளரோடும் உயிர்களோடும் வானிலும் மண்ணிலும் களிப்பும் மகிழ்ச்சியும் பெருகுமாறு களிநடம் புரிந்து பாடியாடுகிருள். இதனைக் கண்ட கடவுளரும் முனிவரும் களிப்புற்றுக் கூத்தாடுகின்றனர். சவித்திர் என்பானை வழிபட்டு அவனுடைய ஞானவொளியின் உதவியால் தங்கள் தவம் மேன்மையுற்று எண்ணியன நிறைவேறட்டும் என்று வேண்டுகின்றனர். புசன் என்பானை நோக்கி, எங்கள் கண்களுக்குத் தெரியாமல் உண்மையை மறைத்துக் கொண்டிருக்கும் பொன்னொளி வட்டத்தை நீக்குமாறு வேண்டுகின்றனர், இருளிலிருந்து ஒளிக்கும், பிறப்பின் பிடியிலிருந்து அமரவாழ்வுக்கும், பொய்மையிலிருந்து வாய்மைக்கும் தம்மை வழிநடத்திச் செல்லுமாறு வேண்டுகின்றனர்.

அமரத்தன்மை பெற்றவரின் கால்வழியினரும் பிரமத்தின் வடிவமாகிய இப்பேரண்டமும் நம் முன் காட்சிப் பொருளாக நின்று நிலவுவதே அவர்கள் செய்யும் வழிபாட்டின் பயனுகும். இருப்பினும், அறியாமை இருளில் மூழ்கியவர்கள் இன்னும் அதே நிலையில் இருக்கிருர்கள். அவர்கள் வெளிச்சத்தைக் காணக் கூசுகிருர்கள். ஊக்கமூட்டும் எழுச்சிப் பாடல்கள் அவர்களுக்கு எரிச்சலூட்டுகின்றன.

'நள்ளிருளின் கார்மேகக் கூட்டம் போல்
பட்டாளம் பட்டாளமாகப் பதுங்கிப் பரவினுர்கள்
செறிந்த கரும் புகைபோல், கொல்லும் நஞ்சைப்போல்,

பார்வையை மறைக்கும் பனிமூட்டம்போல்
அவர்கள் நம்மைச் சூழ்ந்து கொண்டார்கள்
தீவினைகள் ஐயப்பாடுகள் என்னும் விதைகளை
உள்ளத்தில் தூவி விட்டார்கள்
இவ்வாறில்லை என்பதை ' இப்படித்தானுள்ளது ' என்றனர்
இல்லாததையெல்லாம் ' உண்மையாக
உள்ளது ' என்றனர்
தீதெல்லாம் நன்று என்றனர், நன்று தீதாயிற்று
அரக்கரின் தீவினை உலகத்தைக் கலக்கியது
அவர்களுடைய பெயர்களோ ஆயிரம், அவை
அஹி விருத்திரன் மரன் கலி
அஹிர்மான் சாத்தன் என '.

அடுத்துத் தேவர்களுக்கும் அரக்கர்களுக்கும் போர் நீடித்தது. அது எப்போது முடியும்? தேவர்களும் அசுரர்களும் கடல் கடைந்த கதையைச் சிறிய மாறுதல்களுடன் சேர்த்து, ஸ்ரீகண்டய்யா இங்கு நன்கு பயன்படுத்திக் கொள்கிறார். பாற்கடலைக் கடைந்த கதையை நச்சுக்கடலைக் கடைந்து அமுதம் எடுத்ததாக மாற்றியுள்ளார். அஞ்சத்தக்க காட்சிகள் ஸ்ரீகண்டய்யாவின் கைவண்ணத்தால் அழகுக்காட்சிகளாகிவிட்டன. அசுரர்கள் நண்பர்களாய் விட்டனர். அதே அசுரர் அறநெறிக் காவலராய் மாறித் தெய்வங்களாயினர். அவர்கள் நம்மை நோக்கி, ' வாய்மையே என்றும் வெல்லும், பொய்மை வெல்லாது ' என்று அறமுரைக்கின்றனர்.

**அவர் எழுதியவை, மற்றும் பிற:**

1936-இல் ' கன்னட யாப்பிலக்கண வரலாறு ' என்னும் சிறிய நூலை எழுதினார். இவர் ஏற்கெனவே திராவிட மொழிகளின் யாப்பிலக்கணத்தையும் குறிப்பாகக் கன்னட தமிழ் யாப்பிலக்கணங்களையும் சிறப்பாகக் கற்றிருந்ததனால் இப்பொருளைக் குறித்துத் திட்ப நுட்பத்துடன் எழுதும் புலமை இவருக்கு வாய்த்திருந்தது. கன்னடத்திலுள்ள ' ரகளே ' என்னும் பாட்டமைப்பு, ஆங்கிலத்திலுள்ள ' லிரிக் ' என்னும் பாட்டமைப்பு, உரைநடைக் கவிதை (blank verse) வீரப்பாடல், சமஸ்கிருதத்திலுள்ள ' அனுஷ்டுப் ' என்னும் பாட்டமைப்பு போன்ற பல்வகைப் பாட்டமைப்புக்களை மேற்கோள்களுடன் பல இலக்கியங்களிலிருந்து எடுத்துக்காட்டி, பொதுவாக யாப்பிலக்கணத்தைப் பற்றி இவரியற்றிய மிகச்சிறந்த சொற்பொழிவைக் கேட்ட நிகழ்ச்சி இன்னும் என் நினைவில் பசுமையாக இருக்கிறது. யாப்பிலக்கணம் பற்றி அறிய விரும்பும் மாணவருக்கு இந்நூல் மிகவும் பயன்படுவதாகும்.

இவருடைய யாப்பிலக்கண வரலாறு, முடிவுபெருத கன்னட இலக்கிய வரலாறு ஆகிய இரண்டும் ‘கன்னடக் கையேடு’ (A Hand book of Kannada) என்னும் இவருடைய நூலின் பகுதிகளாக விளங்குகின்றன. கன்னட இலக்கிய வரலாற்றின் முன்னுரையில் தன் கருத்தைக்கவர்ந்த புலவர் சிலரைப்பற்றி மட்டும் எழுதியிருப்பதாகக் கூறியிருக்கிருர். “கன்னட மக்களிடையே திறனுயும் திறன் நன்ருக உருப்பெறவில்லை. புதிய படைப்பிலக்கியங்களைக் கண்டதும் கண்ணை மூடிக்கொண்டு பாராட்டுபவர்களாகவும் வானளாவப் புகழ்பவர்களாகவும் இருக்கின்றனர். சமஸ்கிருதம் கற்றவரிடை மரபுவழி நிலவும் இலக்கியச் சுவை நுகர் திறனும் ஆங்கிலங்கற்றவரிடை நிலவும் இலக்கியச் சுவை நுகர் திறனும் பெருமளவில் வேறுபட்டிருக்கிறது”. ஆதலால், திறனுய்வுத் துறையில் ஒருமித்த கருத்து உருப்பெறத்தக்க காலம் இன்னும் வரவில்லை. அதற்காக, ஸ்ரீகண்டய்யா காலம் கனியட்டும் என்று காத்திருக்கவில்லை. தனதுதிறனுய்வு முறைகளை வெளிப்படுத்தத் தயங்கவுமில்லை. அவர் தரும் எடுத்துக் காட்டுகளிலும் விளக்கங்களிலும் தன் திறனுய்வு முறைகளைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

கீழ்க்கண்ட சான்றுகள் இவருடைய திட்ப நுட்பமான திறனுய்வுத்திறத்திற்குச் சான்று பகர்கின்றன. “ஒட்டுமொத்தமாக இங்கு ஒரு மெய்ஞ்ஞானியைக் காண்கிருேமே யன்றி ஒரு புலவரைக் காணவில்லை” . . . “இங்கு இரன்ன கவிஞர் நாடகப் பாங்கிலிருந்து பொது மக்களின் மட்டத்திற்கு வருகிருர். இருப்பினும் இடி இடிப்பதும் மின்னல் பளிச்சிட்டு வீசுவதும் ஓயவில்லை” . . . “பாஞ்சாலியின் அழகை இந்த இடத்தில் வருணிப்பது தேவையா?”

‘கன்னடியருக்கு நல்ல இலக்கியம்’ (கன்னடிகரிகெ ஒள்ளெய சாஹித்ய) என்னும் நூல் ஸ்ரீகண்டய்யாவின் ஆளுமைத் திறனை நன்கு வெளிப்படுத்திக் காட்டியுள்ள சிறந்த நூலாகும். இது, அவருடைய மறைவுக்குப்பின் 1948-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இதில் அவருடைய சொற்பொழிவுகள், நூன்மதிப்புரை, அணிந்துரை ஆகியவை தொகுக்கப்பட்டுள்ளன. அவருடைய பல சொற்பொழிவுகள் இதில் சேர்க்கப்படவில்லை. ஆதலால், அவருடைய பேச்சுக்களில் ‘Burden of the prophets’ போன்றவை நமக்குக் கிடைக்காமற் போயின. இத்தொகுப்பில் அவருடைய தார்வார் சொற்பொழிவு முதலிடம் பெற்றுள்ளது. பிற கட்டுரைகள் கன்னடியரைப் பின் தங்கிய நிலையிலிருந்து முன்னேற்றும் வகையில் கிளர்ச்சி யூட்டுவனவாக வுள்ளன. கன்னடச் சொல்வளம், மொழிநடை, பிறசொற் கடன்பெறல் ஆகியவற்றைக் குறித்த வழிவகைகள் சிலவற்றில் கூறப்பட்டுள்ளன. கன்னட அறிஞர்களின் நூல்களுக்குத் தந்த மதிப்புரை, அணிந்துரை, பாராட்டுரை ஆகியவை இடம் பெற்றுள்ளன.

அவருடைய சொற்பொழிவுகளைச் சுருக்கெழுத்தில் எழுதிப்பின் தட்டச்சு செய்த பகுதிகள் மிக்குள்ளன. அவருடைய இசைவு பெற்று இவை அச்சேறின. இவை கல்வியில் தேர்ந்த கன்னடியரின் மொழிநடையில் இனிமையும் எளிமையும் விரவ அமைந்தவை. அவருடைய மொழிநடை, சொற்சுவையும் பொருள் நலனும் குன்றுமல் எளிய படிப்பாளிகளும் புரிந்துகொள்ளும் வகையில், இலக்கிய மிடுக்கு என்னும் கடுநடை விரவாமல் அமைந்திருந்தது. கொச்சை மொழி எனும் பேச்சு வழக்குகள் உரையாடலில் மட்டும் இடம் பெற்றன. பழங் கன்னடத்திலிருந்தும் இலக்கிய மேற்கோள்கள் எடுத்துக் காட்டப்பட்டன. ஆங்கில இலக்கியத்திலிருந்தும் விவிலிய நூலிலிருந்தும் நல்ல கருத்துகள் மொழி பெயர்த்துக் கூறப்பட்டன.

எளிதும் கடிதுமான திறனுய்வுக் குற்றச் சாட்டுகள், குறை கண்ட விடங்களில் பொங்கும் சீற்றம், நல்லவற்றையும் அரியவற்றையும் உளமொப்பிப் பாராட்டும் புகழுரைகள், எல்லாவற்றுக்கும் மேலாகக் கருநாடக மண்ணின் மீதும் கன்னட மொழியின் மீதும் கொண்ட கங்கு கரையற்ற காதல் ஆகியவை அவருடைய சொற்பொழிவுகளில், சிறிதும் சிதருமல் பின்னிப் பிணைந்து ததும்பிக் குதித்துப் பெருக்கெடுத்தோடும் கருத்தோட்டங்களாக இருந்தன. உணர்ச்சி கொப்புளிக்கப் பேசுகிருர் என்னும் வழக்கமான சிறு குறைபாடு இவருடைய சொற்பொழிவுகளில் காணப்படுவது ஒப்புக் கொள்ள வேண்டியதாகிறது.

வகுப்பறையில் அவருக்கு மாணவர் மீதிருக்கும் கவனத்தைவிட தான் நடத்தும் பாடத்தின் மீதே அவருடைய கவனம் ஈர்ப்புண்டு கிடக்கும் என்று முன்பே எடுத்துக்காட்டி யிருக்கிறேன். ஆனுல், பொது மேடைகளில் கூட்டத்தின் மீதே அவருடைய கவனம் குவிந்திருக்கும். பொதுக் கூட்டங்களில் ஏதோ மனதுக்குத் தோன்றியதைப் பேசித் தீர்க்கிருர் என்று இதற்குப் பொருளன்று. தன் பேச்சைக் கேட்போரில் சிலர் விரும்பவில்லையென்று தெரிந்தால் பேச்சின் போக்கை மாற்றிக் கொள்வார். கேட்பவர்களை மகிழ்விக்க வேண்டும் என்று அவர் எப்பொழுதும் பேசியதில்லை. அவர் பேசியதெல்லாம் கேட்போரை மகிழ்வித்தன. கன்னடமொழியின் சுவையும் வளமும் திரட்சியாக அவர் பேச்சில் பொதிந்து கிடப்பது அவருடைய சொற் பொழிவுகளில் காணமுடிகிறது.

அவர் பிற்காலத்தில் உட்கார்ந்து எழுதிய சில உரை நடைகள்—குறிப்பாகப் படிப்பவர்க்கென்றே எழுதிய உரைநடைகள்—கடுநடையும், வியத்தகு திரி சொல்லாட்சியும், பொருள் மயக்கம் தரும் அருஞ் சொல்லாட்சியும், அணிநயமும் கொண்டவையாயுள்ளன. வழக்கத்திற்கு மாருன வீருப்பு நடையைக் கையாள வேண்டும் என்னும்

விருப்பத்தினுல் இவ்வாறு எழுதினுர் என்று சொல்ல முடியாது. இந்தக் கடுநடையால் அவருடைய கருத்து வெளிப்பாடு எதுவும் தடைப்படவில்லை. அவர் ஏன் அவ்வாறு எழுதினுர் என்ருல், அவருடைய உயர்ந்த கருத்துகளை அள்ளிச் செல்வதில் உயர்ந்த இலக்கிய நடை முந்திக் கொண்டது. அவர் மீது குறை சொல்லிப் பயனில்லை.

பகுதி ஐந்து

# 5. சில நினைவுகள்

தமக்கே உரியதென நினைத்திருக்கும் அரியணை அரசர்க்கும் நிலைப்பதில்லையென்பது நாம் கண்டறிந்த உண்மை. இலக்கிய உலகின் அரசனுக ஸ்ரீகண்டய்யா அரியணையேறினுர். அவர் மட்டும் அமரத் தகுந்த அரியணை அது. ஒருவகையில், அந்த அரியணை பொது மக்களுக்கும் ஸ்ரீகண்டய்யாவுக்கும் இடையில் ஒரு தடைகல்லாக இருந்தது என்றும் கருதினர். தனக்கு வந்த பதவியின் உயர்வை அவர் கருத்தில் கொள்ளாமலிருந்தால் மேலும் மனதுக்கினியவராக விளங்கியிருப்பார். தன்ருல் விரும்பப்படும் மக்கள் தன்னை விரும்புகின்றனர் என்பதும் தான் செய்துள்ள சேவைகளைப் பெரிதாகப் பாராட்டுகின்றனர் என்பதும் அவருக்குப் பெருமகிழ்ச்சியளித்தன என்பதில் ஐயமில்லை. உயர்ந்த பதவியிலிருந்தால் கன்னடத்துக்கு அதிக நன்மை செய்ய முடியும் என்று அவர் கருதினுர். தான் செய்து முடித்த பணிகள் பலவாயினும் அவர் முழு மனநிறைவு அடையவில்லை.

அவருடன் நெருங்கிப் பழகிய நண்பர் சிலர் கூடிக்குலவி வேடிக்கையாகப் பேசும் உரிமை பெற்றிருந்தனர். அவர்களுள், டாக்டர் டி. வி. குண்டப்பா என்பவர் ஸ்ரீகண்டய்யாவுடன் வேடிக்கையாக நகையாடுவதிலும், குத்தலாகவும் உள்ளுறை மற்றும் இரட்டுற மொழிதல் பொருள்படவும் பேசி விலாக்குலுங்க சிரிக்க வைப்பதில் வல்லவர். ஸ்ரீகண்டய்யா இவ்வாறு எளிமையாகப் பழகும் இயல்புடையவராக இருந்தும் அவரை முழுமையாகப் புரிந்து கொள்ளாதவர் பலரிருந்தனர். ஸ்ரீகண்டய்யா உயர்மட்டத்தில் அரச குடும்பங்களோடு மட்டும் பழகுபவர் என்னும் எண்ணம் அவர்களிடையில் உருவாகியிருந்தது. இது ஸ்ரீகண்டய்யாவுக்குத் தெரிந்தபின் அவருக்கு ஒரு மனத்தாங்கலையுண்டாக்கியது.

சில சமயங்களில், அவரை மிக எளிய இயல்பினராகக் கண்ட காட்சிகள் என் கண்முன் நிற்கின்றன. நான் 1942-இல் ஷிமோகா கல்லூரியில் பணியாற்றிக் கொண்டிருந்த போது ஆங்கிலத் துறையை மேற்பார்வையிட அவர் வருவதாயிருந்தது. அவரை என்னோடு வந்து தங்குமாறு வேண்டுகோள் விடுத்தேன். பல துறைகளில் சிறந்த அறிஞர் பலர் அவரைத் தம்மில்லத்திற்கு வந்து தங்குமாறு அழைத்திருப்பர் என்று நான் அறிந்திருந்தாலும் ஆர்வம் தாளாமல் எழுதினேன். என் ஆர்வத்திற்குப் பரிசாக அடுத்த நாளே அவரிட மிருந்து இசைவு வந்த நிகழ்ச்சியால் நான் பெற்ற இரட்டிப்பு மகிழ்ச்சி இன்னும் என்னுள்ளத்தில் இனித்துக் கொண்டே இருக்கிறது. ஸ்ரீகண்டய்யா குறித்த நாளில் வந்து என்னோடு இரண்டு நாட்கள் தங்கியிருந்தார். அவர் என்னோடு தங்கியிருந்த நாட்கள் எனக்குப் பல புதுமையுணர்வுகளையூட்டிய நாட்களாகும். அவர் வந்த கால் மணி நேரம் வரை நானும் அவரும் பிழையற்ற இலக்கிய ஆங்கிலத்தில் வினவும் விடையுமாக உரையாடினோம். பிறகு, எங்களுள் யார்முந்தினோம் என்பது சரியாக நினைவில்லாவிடினும், இருவரும் கன்னடத்தில் உரையாடத் தொடங்கினோம். கன்னடத்தில் பேசத் தொடங்கியதும் பழகும் சூழல் மாறியது. நண்பகல் உணவு நேரத்தில் ஓய்வாகவும் மனம்விட்டும் பேசினோம். எங்கள் பேச்சு, கல்வி இலக்கியத் தலைப்புகளல்லாத அன்றாட நிகழ்ச்சிகளைக் குறித்தும் வாழையிலை வெள்ளித்தட்டுகளைக் குறித்தும் திசை மாறியது.

அன்று மாலையில், ஸ்ரீகண்டய்யாவுக்கும் எனக்கும் மாணவரா யிருந்த இளைஞர் ஒருவர் வந்தார். அவ்விளைஞர் சற்று வருத்தத் தோடு கட்டுண்டவராய் ஒதுங்கி நிற்பதைப் பார்த்து ஸ்ரீகண்டய்யா முறுவல் பூத்தவராய் ' நாம் வெளி மரியாதைக்கு முக்கியத்துவமளிக் காமல் மனங் கலந்து பேசலாம் என்றார். பிறகு அசுவத்தாமன் நாடகத்தைப்பற்றிக் கூறத் தொடங்கினார். இந்த இளைஞர் அசுவத் தாமன் நாடகத்தில் ஓரிருமுறை பங்கேற்று நடித்திருக்கிறார். அந் நாடகத்தை முன்கூட்டியே பல நாட்களாகப் படித்தும் காட்டி யிருக்கிறேன், இந்த இளைஞனைப்பார். இவன் என் மாணவன் என்று சொல்லிக்கொள்கிறான். ஆனால், நான் செய்தவற்றிற்கு எதிர்மாறான செயல்களைச் செய்து வருகிறான் என்று அந்த இளைஞரை விரலால் சுட்டிக் காட்டினார். நான் திடுக்கிட்டுப் போனேன். ஸ்ரீகண்டய்யா மேலும் கூறத் தொடங்கினார். " நான் அந்நாடகத்தில் அசுவத்தாமனை, அவன் என்றும் அமரன் என்பதற் காகக் கதையில் தற்கொலை செய்து கொள்வதாக அமைத்திருக் கிறேன். ஆனால் இந்த நண்பர் அசுவத்தாமனைப் புதை குழி யிலிருந்து எழுப்பிக் கொண்டுவரப் பார்க்கிறார்" என்றார். இப்படி

வெளிப்படப் பேசுவதனுல் மனச்சுமை குறைவதோடு கலந்து பழகும் எளிய இயல்பும் மலர்கிறது.

மறு நாள் நடைபெறவிருந்த கன்னட சாஹித்ய பரிஷத் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக, ஒருமுறை அவ்வூர் பயணியர் விடுதியில் தங்கியிருந்தோம். எங்களில் மூவர், உடையணிந்து புறப்பட அணியமாக வந்து நின்ருேம். ஸ்ரீகண்டய்யாவின் மாணவர்களுள் ஒருவரான நாலாமவர் இன்னும் புறப்படவில்லே. அரைமணி நேரத்திற்கு மேலும் நாங்கள் அவருக்காகக் காத்திருந்தோம். அவர் அறையிலிருந்து வெளிவந்த பாடில்லே. ஸ்ரீகண்டய்யா பொறுமையிழந்து சீறுவார் என்று எதிர்பார்த்தோம். மாருக, புன்முறுவல் பூத்தவராய் எங்களேயழைத்து, 'வாயிற்படியின் இரு பக்கமும் இருவர் கோவிலிலுள்ள வாயிற்காவல் பூதங்களேப் போல் நில்லுங்கள். அவர் எழும்வரை திருப்பள்ளியெழுச்சி பாடலாம் என்று கூறி 'எம்பெருமான் பள்ளி எருந்தருளாயே[1]' என்று பாடத் தொடங்கிவிட்டார்.

கன்னட இலக்கிய உலகின் முடிசூடா மன்னனுகிய ஸ்ரீகண்டய்யா மன்னனுக இருந்தாலும் குடிமக்களுக்குப் பணியும் மன்னனுக இருந்தார். அவர் கன்னட (சாகித்யபரிசத்தின் துணைத்) தலேவராக இருந்தபோது கருநாடகம் என்னும் சொல்லில் தந்நகரம் இருப்பது தான் சரியென்று ஒரு திருத்தம் கொண்டுவந்தார். ஆனல் சாஹித்யபரிஷத் கட்டடத்தில் இயங்கி வந்த ஆங்கில கன்னட அகரமுதலி (அகராதி) அலுவலகத்தில் பணியாற்றிய பேராசிரியர். கே. வி. இராகவாச்சார் இந்த எழுத்து மாற்றத்தை ஒப்பவில்லே. கர்னடக என்னும் பெயர் எல்லாப் பதிவேடுகளிலும் பதிவு செய்யப் பட்டிருப்பதோடு அந்த நிறுவனமும் பதிவு செய்யப்பட்ட ஒன்ருக இருப்பதால், பதிவு செய்யப்பட்ட பெயரிலுள்ள எழுத்துகளே மாற்ற எவருக்கும் அதிகாரம் இல்லே. பொதுக்குழுவின் இசைவு பெருமல் எவர் திருத்தம் செய்தாலும் அது தவருகும் என்று சுட்டிக் காட்டினர். பேராசிரியர். கே. வி. இராகவாச்சார் இளேஞராக இருந்தாலும் சரியென்று பட்டதைத் தெளிவாகவும் துணிவாக வும்எடுத்துக் கூறிய திறத்தை அனேவரும் வியந்து பாராட்டினர். ஸ்ரீகண்டய்யா ஒன்றும் மறுமொழி பேசவில்லே. அவருக்கு அந் நிகழ்ச்சி மனநிறைவளிக்கவில்லே. ஸ்ரீகண்டய்யாவின் எதிரிகள் இதை ஒரு பெரிய வழக்காடற்குரிய செய்தியாக்கிவிட்டனர். எங்கும் இதைப் பற்றிய பேச்சாகவே இருந்தது. ஒரு நாள் ஸ்ரீகண்டய்யா வந்த வண்டி இராகவாச்சாரின் வீட்டு வாயிலில் வந்து நின்றது. 'வண்டி உங்களுக்காக நிற்கிறது. ஓய்விருந்தால்

[1] கன்னடத்தில் திருப்பள்ளியெழுச்சி, 'ஏளய்ய பெளகாய்த்து'.....என வரும். 'எழும்ஐயா விளக்கு (வெளிச்சம்) ஆயிற்று' என்பது இதன் பொருள்.

தங்களோடு சிறிது பேச விரும்புகிறேன்' என்று வந்த செய்தியை ஏற்று இராகவாச்சார் ஸ்ரீகண்டய்யாவைச் சந்தித்தார். ஸ்ரீகண்டய்யா அவரைப் பார்த்து, 'உங்கள் கருத்து ஏற்கத் தக்கது, என் கருத்து தவறு என்பதை ஒப்புக் கொள்கிறேன். நீங்கள் அன்று இந்தச் சிக்கலை எழுப்பிய போது வேண்டுமென்றே தொந்தரவு தருகின்றீர் என நினைத்தேன். நான் தந்த தொந்தரவுக்கு வருந்துகிறேன்' என்று பெருந்தன்மையோடு கூறினார்.

இளைஞர்களாகிய எங்களுள் பலர், அவர் இங்கிலாந்து அரசுக்குப் போற்றிபாடும் போக்கை விரும்பவில்லை. இங்கிலாந்தின் ஆட்சியால் இந்தியா அளவிடற்கரிய நன்மைகளைப் பெற்றிருப்பது உண்மையாயினும் இந்திய ஒற்றுமைக்கு அவர்களே அடிப்படை யானவர் என்பதை ஒப்ப இயலவில்லை. அவர்கள் இந்தியாவை ஒரே ஆட்சியின் கீழ் கொண்டு வந்தது உண்மையே. அவர்கள் இந்தியாவை விட்டுச் சென்றதும் உள்நாட்டுக் குழப்பத்தால் இந்தியா சுக்குநூறாக உடைந்து விடும் என்று, இந்தியரின் வாழ்வு கண்டு பொறுக்காத போராட்டச்சகுனிகள் இங்கிலாந்திலிருந்தவாறு கணியம் (ஜோசியம்) கூறியது பொய்யாயிற்று. இந்தியாவை ஒன்றுபடுத்தும் திறனுளர்களாகக் காலப் போக்கில் தோன்றிய விவேகானந்த அடிகள், இரவீந்திரநாத தாகூர், காந்தியடிகள் ஆகியோர் ஆங்கிலேயர்க்கு நல்லபாடம் புகட்டினர். காலப் போக்கில் விளைந்த நிகழ்ச்சிகளை வைத்துக் கொண்டு, நமக்கு வாய்ப்பான கோணத்தில் நின்றவாறு இத்தகைய சிக்கல்களை நாம் பார்க்கிறோம். ஸ்ரீகண்டய்யாவின் சேவை அரசியல் சார்புடைய தன்று என்பதை நாம் நினைவிற் கொள்ள வேண்டும்.

அனைத்திந்தியப்புகழ் பெற்ற மேற்கண்ட தலைவர்களின் நோக்கில் பார்த்தால், ஸ்ரீகண்டய்யாவின் குறிக்கோள், வரை யறுத்துக் கொண்டபணிகள், ஏற்ற கடமைகள், ஒருவரையறைக்குள் ஆற்றிய பணிகள் ஆகியவை தேசிய நலனுக்கு ஏற்றவையே ஆகும். தேசிய ஒருமைப் பாட்டுக்கு முன்னோடியாக முதன் முதல் கருநாடக மாநிலத்திற்குள் ஒருமைப்பாடு வளர அரும்பாடுபட்டார். சமயப் பொதுமையுணர்வையும் பொறுமையுணர்வையும் சொற் பொழிவுகளின் வாயிலாக வளர்த்து வந்த வகைமை காந்தியடிகள் போன்றாரின் உள்ளத்தைப் பெரிதும் கவரத்தக்கதாகும். இலக்கியம் மற்றும் பண்பாடு தொடர்பாக அவர் வெளியிட்ட கருத்துகள் இன்றளவும் பொன்போல் போற்றப்படுகின்றன.

ஸ்ரீகண்டய்யாவின் நூல்களால் விளைந்த செல்வாக்குப் பிற்காலக் கன்னட இலக்கியங்களிலும், காணப்படுவதாயிற்று. பிற்காலத்தில்

கன்னட இலக்கிய உலகில் ஒப்பற்ற இடத்தைப் பிடித்தவரும் ஸ்ரீகண்டய்யாவின் மாணவருமான மாஸ்தி வெங்கடேச ஐயங்கார் பின்வருமாறு குறிப்பிட்டார். 'இன்று கன்னடக் கவிதைகளில் காணப்படும் இனிமைகள் யாவும் நேரடியாகவோ மறைமுகமாகவோ ஸ்ரீகண்டய்யாவின் படைப்புகளிலிருந்து புதுவடிவம் பெற்று உலவு பவையே யாகும்' என்ருர்.

ஸ்ரீகண்டய்யா எதிர்பார்த்ததைவிட கன்னட இலக்கியத்தை வளர்க்கும் எழுத்தாளர்களின் எண்ணிக்கை அதிகமாகப் பெருகி விட்டது. கன்னடத்திற்கு அவரூட்டிய புத்துணர்ச்சி உயிரூட்டம் பெற்றுவிட்டது. மறுமலர்ச்சி இலக்கியப் படைப்பாளரான ஸ்ரீகண்டய்யா கன்னட மக்களுக்கும் இலக்கியத்திற்கும் செய்துள்ள சேவையை அனைவரும் நன்றியுணர்வுடன் நினைவு கூர்ந்து ஏற்றுக் கொள்கின்றனர். அவர் பழமையைச் சாடிய போராட்டத்தில் கிடைத்த வெற்றி புதுமைகள் வளர வழிவகுத்தது. காலம் பழமை விரும்பிகளையும் தோற்றுவிக்கிறது; புதுப் புரட்சியாளர்களையும் உண்டாக்குகிறது. 'ஒரு நல்ல வழக்கம் உலகத்தைத் தன்வயமாக்கும் நிலை என்றும் நிலவுவதாகுக' என்று ஸ்ரீகண்டய்யா கூறினர்.

# கருவி நூல்கள்

## ஸ்ரீகண்டய்யாவின் நூல்கள்

1. ஏ ஹாண்ட் புக் ஆஃப் ரிட்டாரிக் (ஆங்கிலம்)
2. இங்கிலீஷ் கீதகளு
3. கதாயுத்த நாடகம்
4. அஸ்வத்தாமன்
5. பாரசிகரு
6. கன்னடத பாவுட (பதிப்பித்தது)
7. கன்னட யாப்பிலக்கணத்தின் ஒரு சிறு வரலாறு (கன்னட கைபிடியின் மூன்றும் பாகம்)
8. ஹொங்கனசுகளு
9. கன்னடிகரிகெ ஒள்ளெய சாஹித்ய (சொற்பொழிவுகளும் அணிந்துரைகளும்)
10. கன்னட இலக்கிய வரலாறு (கன்னட கைபிடியின் இரண்டாம் பாகம்)
11. இஸ்லாம் சம்ஸ்கிருதி (மொழி பெயர்ப்பு)

## ஸ்ரீகண்டய்யாவையும் அவர் பணிகளையும் பற்றியவை

**ஆங்கிலத்தில்**

1. எஸ். வி. ரங்கண்ணு, **பி. எம் ஸ்ரீகண்டய்யா**

**கன்னடத்தில்**

1. மாஸ்தி வெங்கடேச ஐயங்கார் (பதிப்பித்தது) **சம்பாவனெ** (ஸ்ரீகண்டய்யாவுக்கு அவருடைய 58வது பிறந்த நாளன்று அன்பளிப்பாக தரப்பட்ட தொகுப்பு நூல். மற்றவைகளோடு ஸ்ரீகண்டய்யாவையும் அவர் பணிகளையும் குறித்த கட்டுரைகள் இதில் அடங்கியுள்ளன.)
2. வி. சீதாராமய்யா, **அஸ்வத்தாமன்**
3. என். அனந்தரங்காச்சார், **அஸ்வத்தாமன்**
4. டி. வி. குண்டப்பா, **சாஹித்யோபாசகரு** (பி. எம். ஸ்ரீகண்டய்யாவைப் பற்றிய பகுதி)

# இந்திய இலக்கியச் சிற்பிகள்

தற்கால, பழம் பெரும் படைப்புக்களில், தலை சிறந்த இந்திய இலக்கியச் சிற்பிகளைப் பற்றி உணர இப்புத்தக வரிசை உதவும்.

இந்த வரிசையில் வெளியான நூல்கள் : (எல்லாம் ஆங்கிலத்தில் கிடைக்கும்).

* லட்சுமிநாத பெஸ்பருவா —H. பருவா
* ராஜாராம் மோகன் ராய் —சௌ. டாகூர்
* கேசவஸுதர் —பிரபாகர் மாச்வே
இளங்கோ அடிகள் —மு. வரதராசன்
* பிரேம் சந்த் —பிரகாஷ் சந்திரகுப்தா
* ஈசுவர சந்திர வித்யாசாகர் —H. பானர்ஜி
* கபீர் —பிரபாகர் மாச்வே
* தாருதத் —பத்மினி ஸென்குப்தா
* வேமனர் —வி. ஆர். நார்லா
* வீரேசலிங்கம் —வி. ஆர். நார்லா
காலிப் —எம் முஜீப்
* மீராபாய் —உஷா நில்ஸன்
ஷா லதீப் —K. B. அத்வானி
சண்டிதாஸ் —சுகுமார் ஸென்
பிரமதா சௌதுரி —அ. முகோபாத்யாய
பாரதேந்து ஹரிச்சந்திரா —மதன்கோபால்
சசால் சர்மாஸ்த் —K.B. அத்வானி
ஜீவனானந்த தாஸ் —சி. தாஸ்குப்தா
* ஸ்ரீ அரவிந்தர் —மனோஜ் தாஸ்
போதனா —D. வேங்கடாவதானி
சி. ஆர். ரெட்டி D. ஆஞ்சநேயலு
ஞானதேவ —பி. ஒய். தேஷ்பாண்டே
ஜெயதேவ சுநீதிகுமார் சாட்டர்ஜி
மஹரிஷி தேவேந்திரநாத் டாகூர் —நா. சௌதுரி
சரோஜினி நாயுடு —ப. ஸென்குப்தா
B. M. ஸ்ரீகண்டய்யா —A. N. மூர்த்திராவ்
* குமாரன் ஆசான் —K. M. ஜார்ஜ்
வள்ளத்தோள் —ஹிருதயகுமாரி
கம்பன் —எஸ். மகராஜன்
நம்மாழ்வார் —அ. சீனிவாசராகவன்
சந்துமேனன் —T. C. S. மேனன்
மாணிக்கவாசகர் —G. வன்மீகநாதன்
வேதம் வெங்கடராய சாஸ்திரி —V. V. சாஸ்திரி (ஜுனியர்)
வித்யாபதி —ராம்நாத் ஜா
மகாகவி உள்ளூர் —சுகுமார் அழிகோட்

**சாகித்திய அக்காதெமி**

*ரவீந்திர பவன், புது தில்லி—1.*

சென்னை-18, பம்பாய்-14, கல்கத்தா-29.

# இந்திய இலக்கியச் சிற்பிகள்

## இந்த வரிசையில் இதுவரை தமிழில் வெளிவந்துள்ள நூல்கள்:

1. **லட்சுமிநாத பெஸ்பருவா**
—ஹேம்பருபா
தமிழ்: க. த. திருநாவுக்கரசு

2. **கபீர்**
—பிரபாகர் மாச்வே
தமிழ்: தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார்

3. **கேசவஸுதர்**
—பிரபாகர் மாச்வே
தமிழ்: ராம கோபிநாதன்

4. **ஈசுவர் சந்திர வித்யாசாகர்**
—ஹிரண்மய் பானர்ஜி
தமிழ்: ராம கோபிநாதன்

5. **ராஜா ராம் மோகன் ராய்**
—செளமியேந்திரநாத தாகூர்
தமிழ்: க. த. திருநாவுக்கரசு

6. **பிரேம்சந்த்**
—பிரகாஷ் சந்திர குப்தா
தமிழ்: சரஸ்வதி ராமநாத்

7. **குமாரன் ஆசான்**
—கே. எம். ஜார்ஜ்
தமிழ்: கே. சி. சங்கரநாராயணன்

8. **தாரு தத்**
—பத்மினி ஸென்குப்தா
தமிழ்: அ. சீனிவாச ராகவன்

9. **வீரேசலிங்கம்**
—வி. ஆர் நார்லா
தமிழ்: நா. பார்த்தசாரதி

10. **ஸ்ரீ அரவிந்தர்**
—மனோஜ்தாஸ்
தமிழ்: பி. கோதண்டராமன்

11. **மீராபாய்**
—உஷா நில்சன்
தமிழ்: எஸ். கந்தசாமி 'துறைவன்'

12. **வேமனர்**
—வி. ஆர். நார்லா
தமிழ்: ந. சுப்பு ரெட்டியார்

13. **B. M. ஸ்ரீகண்டய்யா**
—A. N. மூர்த்தி ராவ்
தமிழ்: இரா. மதிவாணன்

**ஒவ்வொரு நூலும் ரூ. 2-50**